

சென்னை ஆணைகவுனிக்கு சமீபத்தில் புதிய வாராவதி கட்டப்பட்டிருக்கிறது. முதலாக வாராவதி மீது ரயில் கடக்கும் காட்சி.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




தொகுதி 15 } சுக்கில௵ ஆவணி௴ கஉ / 1929௵ ஆகஸ்டு௴ 16உ { பகுதி 2


## கடவுள் வணக்கம்.

ஐந்துவகை யாகின்ற பூதமுத லாதமு
மடங்க வெளியாக வெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்க
ளறிவாக நின்ற நிலையில்
சிந்தையற நில்லென்று சும்மா விருத்திமேற்
சின் மயா னந்த வெள்ளம்
தேக்கித் திளைத்து நானதுவா யிருக்கநீ
செய்சித்ர மிகநன்று காண்
எந்தை வடவாற் பரம குருவாழ்கவாழ
வருளிய நந்தி மரபுவாழ்க
என்றடியர் மனமகிழ வேதாகமத் துணி
பிரண்டில்லை யொன் றென்னவே
வந்தகுரு வேவீறு சிவஞான சித்தி நெறி
மௌனோப தேச குருவே
மந்த்ர குருவேயோக தந்த்ரகுருவே மூலன்
மரபில்வரு மௌன குருவே. (1)

---

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த் தெளிவால்
வாட்டமறா வுற்பவநோய் மாறுமோ—நாட்டமுற்று
மெய்யான நிட்டையினை மேவினர்கட் கன்றோதான்
பொய்யாம் பிறப்பிறப்புப் போம். (2)

---

அஞ்செழுத்தி னுண்மை யது வானவப் பொருளை
நெஞ்சழுத்தி யொன்றாகி நிற்குநா ளெந்நாளோ. (3)

---

# அரும்பொருள் விளக்கம்

(இ-ள்.) பிரபல சுருதியாகிய வேதாகமங்களில் எடுத்துக்கூறும் நிச்சயமே எம்மதங்களினும் மேன்மையுற்ற சைவமதத்தின் கொள்கையென்பதையும், அதனைத் தெள்ளிதினுணர்த்துதற்கே வடவாலின்கீழ் தக்ஷிணாமூர்த்தியே பரமசற்குருவாகி எழுந்தருளியவனென்றும் 'ஆகையால் அத் தக்ஷிணாமூர்த்தி வடிவம் வாழக்கடவதென்றும், அவ்வாறு வாழுதற்குத் திருவருள் புரிந்த நந்தி மரபு வாழக்கடவதென்றும், போற்றுகின்ற தொண்டர்களின் திருவுள மகிழும்படி வஸ்து இரண்டல்ல ஒன்றென்று அறிவிக்கவந்த வடிவமென்றும், இம்மார்க்கமே எச்சாத்திரங்களினும் உயர்வாகிய சிவஞான சித்தியிலுள்ள மார்க்கமென்றும், இதனை மௌனோபதேசஞ் செய்யவந்தது ஞானாசாரிய வடிவமென்றும் மந்திரகுருவென்றும், வேதாந்தாசாரியனென்றும், திருமூலர் மரபில் வந்த மௌனகுருவென்றும், இவனே ஐந்துவகையாகிய பிருதிவி தத்துவமுதல் நாத தத்துவமுழுதும் பகிரங்கமாக வெளிப்படுத்தி அறியாமை அறிவு முதலியவைகளை வேறுபிரித் தறியவல்லவர் அறிவுருவமாகநின்ற நிலையின்கண் மனமற நிற்பாயென்று சும்மாயிருக்கும் படிச்செய்ய அதனால் ஞானசொரூபமாகிய ஆனந்தப்பிரவாகத்தில் நிரம்ப அமிழ்ந்து நானதுவாயிருக்கும்படி நீசெய்தது அற்புதச்செய்கையாமென்றும், அவ்வற்புதச் செய்கை மிகவும் நன்றென்றும் போற்றுகின்றார்.

2. சிரவணத்துடன் மனனம், தீமையில்லாத உண்மையாகிய நிதித்தியாசனம், இவைகளால் தளர்ச்சி நீங்காத பிறவிப்பிணி யொழியுமோ ? இலட்சியம் வைத்து உண்மையான நிட்டையினை அடைந்தவர்க்கே பொய்யாகிய சனன மரண மொழியும்.

நிட்டையென்னும் மெய்ஞ்ஞானமாகிய சாத்திரத்தினை யடைவதற்குக் கேட்டலும் சிந்தித்தலும் தெளிதலும் சோபானமான சாதனங்களாகலின் இம்மூன்றிலேயே திருப்தியடையாது நான்காவதனையும் முக்கியமாகப் பெற வேண்டுமென்பார் மெய்யான நிட்டையினை மேவினர்கட்கன்றோ பொய்யாம் பிறப்பிறப்பும் போம் என்றார்.

இதனால் நிட்டைகூடவே விருப்பு வெறுப் புண்டாகாவென்பதும், அவை உண்டாகா தொழியவே பிறப்பிறப் பொழியுமென்பதும் பெறப்பட்டது.

3. வேதமே மந்திரமாகிய அஞ்செழுத்தின் உண்மையான மெய்ப்பொருளை நான் என் மனதிலமைத்து அதனுடன் இரண்டறக்கலந்து நிற்குநாள் எந்நாளோ வென்றார்.

---




## உண்மை நாகரிகம்

நாகரிகம்! நாகரிகம்!! எல்லாம் நவீன நாகரிகம்!!! மனிதனுடைய வாழ்க்கை நலத்துக்குரிய வரம்பு எது-என்ன? என்றதைப் பற்றிய ஆராய்ச்சியே இக்காலத்தில் வெகு அருமையாகப் போய்விட்டது. உண்பதில் நாகரிகம்! உடுப்பதில் நாகரிகம்! ஆபரணாதிகளில் நாகரிகம்! வாகனாதிகளில் நாகரிகம்! கட்டிடங்களில் நாகரிகம் எல்லாம் நாகரிக மயமாய்ப் போய்விட்டது உலகம். ஆன்ம தத்துவ ஆராய்ச்சி குன்றி ஜட நாகரிகமே தற்கால பிரபஞ்ச தருமமாக இருக்கிறது.

நமது நாடு ஒரு காலத்தில் ஆன்ம விளக்க நாகரிகத்தில் பிரசித்தி வாய்ந்திருந்தது. இப்போது வெளிமயக்கான மேனாட்டு நாகரிகப் பகட்டில் மயங்கி அதை அன்புடன் வரவேற்பதில் முனைந்து நிற்கிறது என்றே கூறலாம்.

நமது நாட்டு உண்மை நாகரிகம் இருந்தவிடம் தெரியாமல் மறைந்து அந்த இடத்தில் குருட்டு ஒழுக்க வழக்கங்களாகிய குப்பை கூளங்கள் நிறைந்து கிடக்கின்றன. இந்த நிலைமை வெகு நாட்களுக்கு முன்னரே ஏற்பட்டு விட்டபடியால் நமது நாடு ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அடிமைக் குழியில் ஆழ்ந்து கிடக்கிறது.

நாகரிகம் என்றால் என்ன? என்பதைப் பற்றி ஒரு சிறிது ஆராய்வோம். மனிதன் விலங்குகளின் நிலைமையிலிருந்த காலமும் ஒன்றுண்டு. இந்த உண்மையை அநேக அறிஞர் ஆராய்ந்து முடிவு கட்டி யிருப்பதால் இவ்விடத்தில் இதைப்பற்றிய ஆராய்ச்சி அநாவசியம். மனிதனுக்கு இயற்கையாக ஏற்பட்டுள்ள பகுத்தறிவு

காரணமாக விலங்கு நீர்மை மாறி நாளாவட்டத்தில் அவனுடைய வாழ்க்கை நலத்துக்குரிய ஒழுங்கு முறைகள் ஏற்பட்டன. கூடி வாழ்தல் ஆகிய சமூக அமைப்பு மனிதனுக்குள்ள பகுத்தறிவின் பயனாகே ஏற்பட்டதே. இந்த விசேட அறிவு விலங்குகட்கு இல்லாமையால் அவை எப்பொழுதும் ஒரே மாதிரியாகவே இருந்து வருகின்றன. மனிதனிடம் விளங்கும் பகுத்தறிவு ஆறுவது அறிவு என்றுஞ் சொல்லப்படும். ஊண், உறக்கம், காம நுகர்ச்சி ஆகிய இம் மூன்றும் எல்லா உயிர்கட்கும் பொது. இந்த மூன்றையும் பற்றிய வேட்கை விஷயத்தில் மனிதனுக்கும் விலங்கு முதலிய மற்றைய உயிர்கட்கும் எவ்வித வேற்றுமையும் இல்லை. ஆனால் இவற்றை அடையும் பொருட்டுச் செய்யப்படும் முயற்சிகளிலும் வழிகளிலுமே வேற்றுமை இருந்து வருகிறது. மனிதன் தன்னுடைய ஆறுவதறிவாகிய பகுத்தறிவைக் கொண்டு தனக்குரிய தேவைகளை ஒழுங்கு படுத்திக்கொண் டிருக்கிறான். அவையாவன நகரநிர்மாணம், விவசாயம், கைத்தொழில், வியாபாரம், போக்கு வரவு சாதனம், அரசியல், சமூகவியல், விதி விலக்குகள் அடங்கிய சாஸ்திரங்கள் முதலியன ஆகும். இவ்வளவும் மனிதனுடைய வாழ்க்கை நலத்தைச் சிறப்பிக்க எழுந்தனவே. மனிதன் சமூகமாகவும் சமாதானமாகவும், சந்தோஷமாகவும் வாழ்க்கை நடத்துவதற்குச் சில இன்றியமையாத குணங்களைத் தவறாமல் கடைப்பிடிக்க வேண்டும். அவையாவன அறிவு, ஒழுக்கம், அன்பு, அருள், தயை, தாட்சணியம் முதலியன ஆகும். இந்த நல்ல-சமூக ஒற்றுமைக்கு அத்தியாவசியமான குணங்கள் ஒவ்வொருமனிதனிடமும் இல்லையென்றால் சமூக ஒழுங்கு கெட்டு எதேச்சையாகத் திரியும் மிருக வாழ்க்கைக்கு ஒப்பான நிலைமையே ஏற்பட்டு விடும். மேற்கூறிய நற்குணங்களுக்கு ஆதாரமான தன்மையே நாகரிகம் எனப்படும். நாகரிகம் என்னும் மொழி கண்ணோட்டம் என்று பொருள்படும். கண்ணோட்டமாவது,

> "தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்க மாட்டாமை. இஃது அவர் மேற்கண் சென்றவழி நிகழ்வதாகலின், அப்பெயர்த் தாயிற்று"

என்று பரிமேலழகர் கூறி யிருக்கிறார். இதுவே தாட்சணியம் என்றும் வழங்கப்படும்.

நாகரிகம் என்னும் மொழிக்கு கண்ணோட்டம், தாட்சணியம் என்னும் பொருள் எவ்வாறு வந்தது? என்பதைப்பற்றி இங்கே

சிறிது கூறுவது பொருந்துமென்று நினைக்கிறோம். நாகரிகம் என்ப தற்கு நகர சம்பந்தமானது என்பது பதப்பொருளாகும். இதி லிருந்து நகரத்தில் வசிப்பவர்கள் கல்வி அறிவு ஒழுக்கங்களோடு தயவு, தாட்சணியம், அன்பு, அருள் முதலிய நறுங் குணங்களைப் பெற்றிருந்தனர் என்பது போதரும். இது பகுத்தறிவு விளங்கப் பெற்ற மக்கள் விலங்குத்தன்மை மாறி காடு கெடுத்து நாடாக்கி நகர நிர்மாணம் செய்து வாழ்க்கை நடத்தத் தொடங்கிய காலத்தில் இருந்த நிலைமையைப் பற்றிய அபிப்பிராயம் என்று கொள்ளலாம். இப்பொழுதும் நகரங்களில் வசிப்பவர்கள் கிராமாந்தர வாசிகளை நாட்டுப்புறத்தான், பட்டிக்காட்டான் என்ற பெயரால் வழங்கி வரு கிறார்கள். நாட்டுப் புறம் என்பது அறிவிற் சிறந்த நாகரிக மக்கள் நிரம்பிய நாட்டுக்குப் புறம்பானது என்று பொருள்படும். எனவே காடு என்பதாயிற்று. பட்டிக்காடு என்பதும் நாட்டுக்குப் புறம்பான காட்டையே குறிக்கின்றது.

மேற்கூறியவற்றால் மக்கள் காடுகளில் விலங்கினங்களோ டொப்ப வாழ்ந்து வந்தமையும் அவர்கள் ஆறாவதறிவாகிய பகுத் தறிவின் வளர்ச்சியால் மாக்கள் நிலைமையினின்றும் மாறி காடு கெடுத்து நாடாக்கி மாண்புடை மக்களாக வாழ்க்கை நடாத்தி வந்தமையும் இனிது விளங்கும். ஆகவே நாகரிகம் என்பது மக்களை மக்கள் அடிமைப்படுத்தும் பான்மைவாய்ந்த வெறும் வெளிப்பகட்டு அல்ல என்பதும் மக்கள் கட்டுத்திட்டமாய் ஒரு ஒழுங்குக்கு-சட்டத் திற்கு உட்பட்டு சமாதானமான முறையில் இன்ப வாழ்க்கை நடத்துவதற்கு ஆதார பூதமாய் விளங்குவ தென்பதும் நன்கு தெளியப்படும்.

நேயர்களே! இக்காலத்தில் நாகரிகம் என்றால் என்ன? என் பதைச் சற்றே சிந்தித்துப் பாருங்கள். மக்கள் வாழ்க்கையில் அமை திக்குறைவை-சமாதான மின்மையை உண்டாக்கக் கூடிய அமிசங் களே நாகரிகம் என்பதாயிருக்கிறது. இக்கால நாகரிகம் மிருகங்களைக் காட்டிலும் கேவலமான நிலைமையில் மக்கள் சமூகத்தை ஆட்டி வைத்துக்கொண் டிருக்கிறது. மனிதத் தன்மைக்கு இன்றியமை யாத அன்பு, அருள், தயை, தாட்சணியங்களை அடியோடு வேரறுத்து வீழ்த்தும் மனப்பான்மையே நாகரிகமாக விளங்கு கிறது. இக்கால நாகரிகத்தை க்ஷய ரோகம் என்று கூறிய பெரி யார் வாக்கு பொய்யல்ல, முற்றிலும் உண்மையே யாகும். இந்த

நாகரிகம் மேனாடுகளைப் பலமாகப் பற்றிக்கொண்டிருப்பது போலவே நமது நாட்டையும் பீடித்து வருகிறது. மக்களுக்குச் சித்த விகாரம் உண்டாக்கி அவர்களைப் பல விதத்திலும் வாட்டி வருகிறது. நீர் நில வளங்களிற் பேர் பெற்ற நமது நாட்டில் வறுமையும், அறியாமையும், பிணியும் தாண்டவ மாடுகின்றன. அன்பு அருள், தயவு, தாட்சணியத்தை அடிப்படையாகக் கொண்டு நிருமாணிக்கப் பெற்ற நமது மக்கள் சமூகத்தில் மனிதத் தன்மைக்கு நேர் முரணான சாதி சமய வேற்றுமைகள், பொருளற்ற மூடப் பழக்க வழக்கங்கள் குடிகொண்டு விட்டன. உண்மை நாகரிகம் போனவிடந் தெரியவில்லை. ஆதலால் நமது நாடு மேனாட்டுத் தளுக்கிலும் ஆடம்பரத்திலும் வெகு சுலபமாக மயங்கி அடிமைப்பட்டு வருகிறது.

நமது நாட்டு ஆன்ம விளக்க நாகரிகம் மறைந்து மேனாட்டுப் போலி நாகரிக வெள்ளத்தில் நாம் தத்தளித்துக்கொண் டிருப்பதால் பிறர் எள்ளி நகையாடத் தக்க நிலைமையி லிருந்து வருகிறோம். இவ்வித வருந்தத் தக்க நிலைமை எப்பொழுது நீங்குமோ தெரியவில்லை. யாம் மேலே விவரித்ததி லிருந்து நாகரிகத்தின் உண்மை என்ன என்பது ஒருவாறு வாசகர்களுக்கு விளங்கும் என்று நம்புகிறோம். மிருகங்கள் தான் ஒழுங்கு முறையின்றி வாழ்கின்றன என்றால் நாகரிகம் வாய்ந்த ஆறறிவு படைத்த மக்களும் ஒருவரை ஒருவர்—ஒரு நாட்டை ஒரு நாடு அடிமையாக்கிக் கொடுமைப் படுத்தி வாழ்தல் முறையா? என்று கேட்கின்றோம். எல்லாரும் சம உரிமையும் சுதந்தரமும் சகோதரத்துவமும் பெற்றுச் சமாதான வாழ்க்கை நடத்துதலே உண்மை நாகரிக மாகும். இதற்கு மக்களுக்குள் அறிவு, ஒழுக்கம், அன்பு, அருள், தயை, தாட்சணியம் முதலிய உயர் குணங்கள் ஓங்கி வளரத்தக்க கல்வி பரவ வேண்டும். பொது ஜனத் தலைவர்களும் அரசாங்கத்தாரும் நாட்டில் உண்மை நாகரிகம் பெருக்கிச் சன்மார்க்க வாழ்வுக்கு வழி காட்டுவார்களாக. எல்லாம் வல்ல திருவருள் துணை நின்று நமது வேட்கையைப் பூர்த்தி செய்வதாக.

ஓம் தத் ஸத்.



# இந்தியர் புறமதம் புகுவதேன்?



(நாங்குனேரி எஸ். அருணாசலம் பிள்ளை)

பாதகண் டத்தின் பல்சம யங்களுள்
சைவம் வைணவ மாகிய விரண்டுமே!
சுருதி யுக்தி அனுபவம் மூன்றும்
முறையே பொருந்த மூப்புடைத் தென்பதை
ஆராய்ச்சி யாள ரறிவ ராயினும்
இவ்விரு மதங்களி லிருந்துவிண் ணெய்திய
பக்தி மான்கள் பலர்தம் சரிதையை
உற்று நோக்கி முற்ற உணர்ந்தார்
மற்றோர் மதத்தை மனத்தினும் கருதார்
எனினும் இந்தியர் இதர மதங்களில்
ஏராள மாக ஏகுதற் குரிய
காரணம் யாதெனக் கழறக் கேண்மின்!
இப்புவி யதனில் இறைவன் வகுத்த
எப்பிற வியினும் ஏற்றமிக் குடைய
இந்திய ராகு மன்பதை யாளர்
மேல்கீழ் சாதியாம் மேட்டிமை கொண்டு
தூற்றிச் சிலரைத் தூரநில் லென்பதும்
விலகு விலகென விலங்கொடு மதிப்பதும்
பின்பவர் புறமதம் போய்ப்புக் காராய்
அன்னிய நாட்டா ராசா ரத்தொடு
ஆங்கிலங் கற்று அரசாங் கத்தின்
உத்தியோ கத்தால் உயர்த்தப் பட்டால்
சார்சா ரென்றே சமமாய்க் கொண்டு
தொண்டு புரிவதும் உண்டு களிப்பதும்
என்னென் றுரைப்பேம்! என்னென் றுரைப்பேம்!
இச்சாதி பேதமே சமய இழுக்காய்
எத்தனை மாந்தரை இதர மதங்களில்
இழுத்துச் சென்றதென் றெண்ணவும் போமோ!
அந்தோ! அன்னிய நாடர்தம் மதத்தை
அகில மெங்கும் பரப்பு மவாவால்

செய்யும் சூழ்ச்சியிவ் வையக மறிந்தும்
நித்தனும் நிமலன் நீள்நில வாழ்வில்
பக்தராய்க் கொண்டு முத்தி யளித்த
சைவ சமயத் தறுபத்து மூவர்
வைணவம் தழைக்க வந்தபன் னிருவர்
இல்லறம் துறவறம் இரண்டின் வழியே
இறைவன் பதமலர் எய்திய பல்லோர்
அத்தனை பெயரையும் ஆராய்ந்து பார்ப்பின்
எக்குலத் தவரென இறையுமெண் ணியதோ!
அவர்தம் ஒழுக்கமுறை யாலுயர் வுற்றமை
உண்மை நூல்கள் உணர்த்தக் கண்டும்
ஆங்கில ஆட்சி அவ்வழி நின்றும்
நாமேன்! நிட்டூர மாகநின் றிடவேண்டும்!
இவ்வா றிருந்திடின் இந்தியர் பல்லோர்
ஆண்டுக டோறும் அயல்மத மேகி
புறச்சம யத்தொகை பூமியின் மிகவே
இந்து சமயம் இருந்தஇடம் மறைந்
திறந்து படுமென இயம்பவும் வேண்டுமோ!
ஆதலின் மேதையீர்! ஆண்டவன் படைப்பில்
கீழ்மே லென்னும் கிளைகள் வேண்டாம்
தாய்நாட் டவரைச் சமமாய் மதித்தே
உண்மை வழியை உலகோர்க் குணர்த்தி
சைவ வைணவ உண்மைதழைத் தோங்க
ஒழுக்க முறையால் உயர்கதி பெறவும்
எல்லாம் வல்ல இறைவன் இணையடி
என்றும் ஏத்தி இன்பவாழ் வடைவேம்.

சங்கத் தமிழை வளர்த்த பாண்டியன் பல புலவர்களை நோக்கிச் சபையில் நான்கு பொற் கொலுசுகளில் தொங்குகின்ற ஓர் ஊஞ்சல் பலகையில் திரண்ட பொற் குவியலிட்டு நான்கு கொலுசுகளும் அற்றுவிழும்படி பாடினவர்கள் பொற் குவியலைப் பெற்றுக் கொள்ளலாம் என்று கூறவும் அப்புலவர்க ளெல்லாம் திகைப்புற்றனர். அச்சமயம் வழியே வந்து கொண்டிருந்த ஔவை அறிந்து நான்கு பாடலையும் அறும்படி பாடி பரிசு பெற்றனள்.




## வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(19-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப் பண்டிதர், சித்தூர்.)

### ஞான நிஷ்டையிற் கர்மாவினுபயோக மின்மை

சீடன்:—ஞான நிஷ்டை கர்மத்தின் வாயிலாக அடையப் படாதோ?

குரு:—ஞான நிஷ்டையினிடத்து ஆசக்தி யுள்ளவனுக்குக் கர்மம் உபயோகப் படுவ தின்று. விரோத சுபாவமுடைய கர்மமும் ஞானமும் ஒன்றற் கொன்று விரோதமுள்ளவையாகலின் அவ் விரண்டிற்கும் சேர்க்கை யுண்டாகாது. எங்ஙன மெனின்; கர்மமானது, நான் செய்கிறேன் என்னும் பாவத்தோடு கூடியது; ஞானமோ, நான் செய்கிறேனென் னும் பாவமின்றியது. ஞானம், தேகமே ஆத்மா என்னும் பாவத்தை நசிக்கச் செய்வது; கர்மம், அதனை விருத்தியாக்குவது. கர்மம் அஞ் ஞானத்தை மூலமாக வுடையது; ஞானமோ அஞ்ஞானத்தையும் கர்மத் தையும் நாசப்படுத்துவது. ஆகவே, கர்மத்திற்கு அதன் விரோதியான ஞானத்தோடு சேர்க்கை எங்ஙன முண்டாம்? எப்படி இருளுக்கும் ஒளிக்கும் சேர்க்கை சம்பவியாதோ அப்படியே ஞான கர்மங்களுக்கும் சம்பவியாது. மேற்குத் திசை நோக்கியுள்ள வொருவன் கிழக்குத் திக்கி லுள்ள பொருளைக் காண முடியாததுபோல, அந்தராத்மாவினிடத்தில் லயமடைந்த சித்த விருத்தி யுடையவனுக்குக் கர்மத்தினிடத்துப் பிர விர்த்தி யுண்டாதலில்லை. ஞான நிஷ்டையினிடத்து ஆசக்தியுடைய யதிக்குக் கர்மத்தைச் செய்ய அவகாச மில்லவே யில்லை. அத்தகைய ஞானிக்கு ஞான நிஷ்டையே கர்மம்; அதுவே சந்தியா வந்தனம்; அதுவே சகலமும்; அதைத் தவிரப் பிறிதொன்றினை ஆசிரயிப்பதில்லை. ஆத்மாவிற்கு, புத்தியால் கற்பிக்கப்பட்ட அழுக்கைக் கழுவுதலே ஸ்நான மாகும். இந்த ஸ்நானத்தினால் ஆத்மாவிற்குப் பரிசுத்தத் தன்மை யுண்டாகுமே யன்றி, மண் ஜலம் முதலியவற்றால் உண்டாகாது.

மனம் தனது நிஜவடிவத்தில் நிலைத்து நிற்பதே அனுஷ்டானமாகும். மனம் வாக்குக் காயம் என்னும் திரிகரணங்களாற் செய்யப்படுவது அசத்திய மாகலின் திருசிய வஸ்துக்க ளனைத்தையும் நிஷேதித்து நிஜரூபத்தைப்

பாவித்துக்கொண் டிருத்தலே சந்தியா வந்தனமாம். அதுவே அனுஷ்டான மாம். அதுவே தானமாம். சுத்த சித்த முடையவர்களாய் உண்மைப் பொருளை யறிந்துள்ள ஞானிகளுக்கு ஆத்மானுசந்தானத்தைக் காட்டிலும் வேறு அனுஷ்டானம் யாதுளது? ஆகையால் ஞான நிஷ்டையில் விருப்புடையவன் நிச்சலனும் ஞான நிஷ்டையினிடத்து ஆசக்தி யுடையவனுய்க் காரியாந்தரங்களை விட்டு எப்பொழுதும் ஆத்ம நிஷ்டை யுடையவனு யிருத்தல் வேண்டும். யோகத்தைக் கைக்கொள்ள விரும்புவோன் தனக்குகந்த சில கர்மங்களை அனுஷ்டிக்கலாமே யன்றி, அதனை மேற்கொண்டுள்ளவன் கர்மத்தைக் கருசலாகாது. ஞானப்பியாசியாகிய முமூட்சுவுக்கு வேறு காரியங்களிற் சிறிதும் விருப்ப மிருத்தலாகாது. அங்ஙனம் வேறு கர்மங்களில் ஆசத்தி யுடையவனு யிருப்பின், அவன், தன் மனத்தை வேறிடத்திற் செலுத்திக்கொண்டு பனைமர மேறுவோன் கட்டாயம் அதினின்றும் விழுந்து விடுவதுபோல் விழுவான். ஞானசித்தி யெய்தி கிருதார்த்த னனவனுக்குப் பாகிய திருஷ்டியே யில்லாதிருக்கு மென்றால் கர்மங்க ளில்லையென்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

(இப்படி திருசியானுவித்த சவிகற்ப சமாதி சொல்லப்பட்டது.)

(2) சப்தாநுவித்த சவிகற்ப சமாதி:—நான் நிர்மலன், ஆதியில்லாதவன், மனோ வாக்குகளா லறியப்படாதவன், சுருதி வசனங்களால் தெரிந்துகொள்ளத் தக்கவன், அகண்ட ஞான வடிவினன், அறிந்ததற்கும் அறியாததற்கும் வேறா யிருப்பவன் (அதாவது அறிந்து கொள்பவன்), மாயையும் அம் மாயையின் காரியங்களாகிய தேகேந்திரியாதிகளும் இல்லாதவன், கேவலம் திருக்ரூபன், சின்மாத்திரமாய்ப் பிரகாசிப்பவன், தேகேந்திரியாதிகளுக்கு வேறா யிருப்பவன், வேறானவனுக வின்றி நானுகவே யிருப்பவன், உள்ளும் புறமும் நிறைந்திருப்பவன், ஜராமரணங்க ளில்லாதவன், நித்தியானந்த வடிவினன், அத்துவிதியனு யுள்ளவன், அந்தராத்மாவினு மபின்னமும் சத்ய ஞானனந்தாதிலட்சணமும் சுருதிகளா லறியப்படுவதும் பரஞ்சோதி சொரூபமுமாகிய பிரஹ்மமே நான் என்றிவ்வாறு ஆத்ம சொரூபத்தை நிரூபிக்கும் சப்தங்களாலேற்பட்ட வஸ்துவை, சின்மாத்திரமாகிய ஆத்ம வஸ்துவைக் கிரகிக்கும் மனோ விருத்தியினுல் பாவித்துக்கொண் டிருக்கவேண்டும். காமம் முதலாகிய திருசியங்களை அடக்குதல் முதலிற் கைகூடுமாறு திருக்கு வடிவமாகிய ஆத்மாவினிடத்தில் நிஷ்டை யுள்ளவனுக்கு, நான் சுத்தன் என்பனபோன்ற சப்தங்களோடு கலந்த எந்த பாவம் உளதோ அது சப்தாநுவித்த சவிகற்ப சமாதியாம்.

## நிர்விகற்ப சமாதி.

ஆத்மா சாட்சியாகலின் தன்னிடத்தில் திருசியங்கள் தோற்றிக்கொண் டிருக்கும். அவற்றை நிவிர்த்திக்கும் மனத்தின் அவஸ்தை (நிலை)யே நிர்

விகற்ப மெனப்படும். (திரிபுடித் தோற்றமில்லாத அகண்டப் பிரம்மாகாரமான அந்தக்கரண விருத்தியின் நிலைமைக்கு நிர்விகற்ப சமாதி யென்று பெயர்—விசார சாகரம்).

எவன் சிலகாலம் வரையில் சவிகற்ப சமாதியை இடைவிடாது அப்பியாசிக்கின்றானோ அவனுக்கு நிர்விகற்ப சமாதி சித்திக்கும். எப்பொழுதும் நிர்விகற்ப சமாதி நிஷ்டையில் விருப்பவனுக்குச் சனன மரணாதிகளி னழிவும் மோக்ஷ சுகத்தினடைவும் உண்டாகும். அந்த மகாத்மாவானவன், நான் இதனைத் தெரிந்துகொண்டேன் தெரிந்துகொள்ளவில்லை யென்னும் பாகியாப்யந்தர ஞானமின்றி நிஜரூபமாகிய ஆனந்த சாகரத்தில் மூழ்கிச் சும்மாவிருக்கிறான். நிர்விகற்பமாகிய எந்தப் பிரஹ்மமுளதோ அதனிடத்தே நிலைபெற்றிருக்கும் இந்தத் தன்னியனே, பாகிய திருஷ்டி யுள்ளவர்களுக்குச் சீவித்திருப்பவன்போலக் காணப்படினும் முக்தனே யாவன்.

### பாகிய சமாதி.

திருசியானுவித்தம் சப்தானுவித்தம் நிர்விகற்பம் எனச் சமாதி மூன்றாம். இவை இருதயத்தில் (உள்ளே) எப்படி யத்தனத்தோடு செய்யப்படுமோ அப்படியே பேதபாவம் நிவிர்த்தியாகும் பொருட்டுப் பாகியப் பிரபஞ்சத்திலும் செய்யப்பட வேண்டும். (எனவே; சமாதி (1) அந்தர திருசியானுவித்த சமாதி (2) அந்தர சப்தானுவித்த சமாதி, (3) அந்தர நிர்விகற்பசமாதி, (4) பாகிய திருசியானுவித்த சமாதி (5) பாகிய சப்தானுவித்த சமாதி (6) பாகிய நிர்விகற்ப சமாதி என அறுவகைப்படும். இவற்றுள் இதுகாறும் கூறியவை அந்தர சமாதிகளாம். இனி, பாகிய சமாதி செய்யும் விதம் கூறப்படுகிறது.)

சச்சிதானந்த சொரூபமாகிய பிரஹ்மம் அதிஷ்டானமாகும். அந்தப் பரப் பிரஹ்மத்தினிடத்தில் நாமரூபாத்மகமாகிய உலகம் ஆரோபிக்கப்பட்டுப் பிகாசித்துக்கொண் டிருக்கின்றது. வெண்மை குளிர்ச்சி திரவம் இம்மூன்றும் ஜலத்தின் குணங்களாம்; நீளமா யிருத்தலும், அலையென்னும் பெயரும், அலையின் வடிவம். ஆனால் இவ் வைந்தையும் சேர்த்து அலையெனக் கூறுவர். அப்படியே சத்து சித்து ஆனந்தம் இம்மூன்றும் பிரஹ்மத்தின் வடிவங்களாம்; நாமம் ரூபம் இவ்விரண்டும் உலக ரூபங்கள். ஆனால் மூடர்கள் இவ் வைந்தையும் சேர்த்துப் பிராந்தியினால் உலகம் எனக் கூறுகின்றனர். இவற்றுள் பிரஹ்மத்தின் சொரூபத்தை மாத்திரம் கிரகித்தல் முதலாவதான பாகிய சமாதியாம் (பாகிய திருசியானுவித்த சமாதியாம்). ஞானியானவன் சச்சிதானந்த வடிவமாகிய பிரஹ்மத்தினின்றும் ஜகத்ரூபமாகிய நாமரூபங்களை நீக்கி, அவற்றைப் பிரஹ்மத்தினிடத்தே ஒடுக்கி, அதிஷ்டானமாய்ச் சச்சிதானந்த வடிவமாயுள்ள பிரஹ்மமே நான் என்று நிச்சயித்தல் வேண்டும்.

நான் நிலமு மன்று, நீருமன்று, தீயுமன்று, காற்றுமன்று, ஆகாயமு மன்று, அவற்றின் காரியமுமன்று, இவற்றிற்கு அதிஷ்டான (ஆதார)மாயுள்ள

நிர்மலமான எந்தப் பிரஹ்மமுண்டோ, எல்லாவற்றினும் மேலானதும் ஏகமாயுள்ளதுமான அந்தப் பிரஹ்மமே நான். நான் சப்தமுமன்று, ரூபமுமன்று, பரிசமுமன்று, ரசமுமன்று, கந்தமுமன்று, வேறொன்றுமன்று, இவை யனைத்திற்கும் அதிஷ்டானமாயும், மாயையின் சம்பந்த மற்றதாயும், ஒன்றாயும், நிரதிசயமாயும், சின்மாத்திரமாயுமுள்ள எந்தப் பிரஹ்ம முண்டோ அந்தப் பரப்பிரஹ்மமே யாவேன். நான் தேகமுமன்று, இந்திரியங்களுமன்று, பிராணவாயுவுமன்று, மனமுமன்று, புத்தியுமன்று, சித்தமுமன்று, அகங்காரமுமன்று, இவற்றிற்கெல்லாம் ஆதாரமும் நிர்மலமும் ஏகமும் நிரதிசயமும் சின்மாத்திரமுமாகிய பிரஹ்மமே நான். நான் தேசமன்று, நான் காலமன்று, திசையன்று, ஸ்தூலமாகவும் சூட்சுமமாகவுமுள்ள பிற வஸ்துக்களுமன்று, இவற்றிற்கெல்லாம் அதிஷ்டானமும் நிர்மலமும் ஏகமும் நிரதிசயமும் சின்மாத்திரமுமான எந்தப் பிரஹ்மமுளதோ அதுவே நான். என்றிவ்விதமாக ஞானியானவன் எல்லாக் காலங்களிலும் எல்லா அவத்தைகளிலும் திருசியமாகிய உலக முழுதும் அதற்கு அதிஷ்டானமாகிய பரப்பிரஹ்மமே யென்றுபாகிய சப்தானுவித்தத்தை ஆசிரயித்துக்கொண் டிருக்கவேண்டும்.

பிரம்மத்தினிடத்தில் ஆரோபிக்கப்பட்டுள்ள நாமரூபங்களை பிரம்மத்தி லொடுக்கிப் பரமானந்த வடிவ பிரம்மமே நான் எனப் பாவிக்கவேண்டும். சஜாதீய முதலிய பேதங்களற்றதும், நிர்விகாரமானதும், சின்மாத்திரமாயுள்ளதுமாகிய பிரம்மமே நான் எனப் பாவிக்கவேண்டும். நிர்மலமும் சித்ரூபமும், அந்தராத்ம சொரூபமுமாகிய பிரம்மமே நான் எனப் பாவிக்கவேண்டும். அதி சூட்சுமமும் இருக்கிறதென்று மாத்திரம் கிரகிக்கத் தக்கதும் நிர்விகற்பமானதும் மேலானதும் தன்மாத்திரமும் நிரதிசயமும் அபின்னமு மாகியதுமாகிய பிரம்மமே நான் எனப் பாவிக்கவேண்டும். இப்படி நிர்விகாரம் முதலாகிய சப்தங்களால் ஏற்பட்ட ஆத்ம வஸ்துவைத் தியானிப்பவனுக்குச் சித்தம் லட்சியத்தில் நிலைக்கும். பிரம்மானந்தத்தின் எழுச்சியினால் பரப்பிரம்ம சொரூபத்தோடு ஏகத்தன்மை யடைந்து, பிரம்மாகாரத்தை யடைந்த சித்த விருத்தி சலித்தலின்றி நிச்சலமாய் இருத்தலே நிர்விகற்ப சமாதியாகும். பிரயத்தனமுள்ளவனும் இந்திரிய நிக்கிரக முள்ளவனுமாகிய ஞானி சமாதி நிஷ்டையினின்று மெழுந்தபொழுதும் சமாதியி லிருக்கும்பொழுதும் பிரமாதமில்லாத (மறதி யில்லாத)வனாய் எப்பொழுதும் ஆறுவித சமாதிகளையும் செய்துகொண் டிருத்தல்வேண்டும். எதுவரையில் ஆத்மசொரூபத்தின் விபரீதபாவனை முழுவதும் நீங்கவில்லையோ, எதுவரையில் சொரூபானுபவம் சித்திக்கவில்லையோ அதுவரையில் இவ் வறுவகைச் சமாதிகளையும் அப்பியாசித்துக்கொண் டிருத்தல்வேண்டும்.

(நன்கு விளங்கும் பொருட்டு இச்சமாதிக ளாறினையும் சுருக்கமாகக் காட்டுவோம்.)

(1) பாகிய திருசியாநுவித்த சமாதி:—உலகத்தில் நம்மால் பார்க்கக் கூடிய பதார்த்தங்க ளனைத்திலும் அஸ்தி பாதி பிரியம் நாமம் ரூபம் என்னும் ஐந்து அமிசங்களுண்டு. உதாரணமாக:—ஓர் கட (குட)த்தை எடுத்துக் கொள்ளுவோம். அதில் 'கடம்' என்பது நாமம் (பெயர்), உருட்சியா யிருப்பது அதன் ரூபம். கடம் இருக்கிறதென்பது அஸ்தி. கடம் விளங்குகிறதென்பது பாதி, கடம் ஆனந்தமாய் (பிரியமாய்) இருக்கிறதென்பது பிரியம். இவற்றுள் அஸ்தி பாதி பிரியம் என்னும் மூன்றும் வியாபகம்; அதாவது எல்லாப் பொருள்களிலு மிருக்கின்றன. நாமம் ரூபம் இரண்டும் வியபிசாரியாம். அதாவது ஒன்றி லிருப்பதுபோல் மற்றொன்றிலிருப்பதில்லை. அதாவது கடத்தின் நாமரூபமும் மற்றொன்றிலிருப்பதில்லை. ஆகவே வியபிசாரியாம். அஸ்தி பாதி பிரியம் இம்மூன்றும் எல்லாப் பொருள்களிலு மிருக்கின்றன. ஆகையால் வியாபகமாம். இம்மூன்றும் சத்து சித்து ஆனந்தம் எனப்படும். இவை மூன்றும் பிரஹ்மாமிசம். நாமரூப மிரண்டும் மாயாமிசம். துக்கத்தை யுண்டாக்குதற்குக் காரணமான நாமரூபங்களைத் தள்ளி எல்லாவற்றையும் சச்சிதானந்த சொரூபமாகப் பார்த்தல் வேண்டும். இதுவே பாகிய திருசியானுவித்தம் எனப்படும்.

(2) பாகிய சப்தாநுவித்த சமாதி:—நாமரூபங்க ளிரண்டையும் அதிஷ்டானமாகவுள்ள சச்சிதானந்தத்தில் ஒடுக்கி, அகண்ட சச்சிதானந்த சொரூபமென்னும் பாவனைகொண் டிருப்பதாம்.

(3) பாகிய நிர்விகற்ப சமாதி:—மேற்கூறிய இருவகைச் சமாதிகளினப்பியாசத்தால் சித்தமானது அலையில்லாத கடல்போல பரமானந்த நிலையில் நிற்றலாம்.

(4) அந்தர திருசியாநுவித்த சமாதி:—நான் திருசிய வஸ்துக்க ளனைத்திற்கும் சாட்சியா யிருக்கிறேன் என்று அனுசந்தானம் செய்தலாம்.

(5) அந்தர சப்தாநுவித்த சமாதி:—நான் ஏகன், சச்சிதானந்த ரூபன் எனச் சிந்தனை செய்தலாம்.

(6) அந்தர நிர்விகற்ப சமாதி:—மேற்சமாதிகளி னப்பியாச முதிர்ச்சியால் அவைகளை விட்டுத் தனதாத்ம சொரூபானந்தத்தில் நிவாத தீபம்போல இருப்பதாம்.

சப்தாநுவித்த மன்றிச் சப்தாநநுவித்தம் என்றும் ஓர் சமாதியுண்டு. நிர்விகற்பமும் அத்வைத பாவனு வடிவம், அத்வைதாவஸ்தான வடிவம் என இருவகையாம். இவை ஈண்டு விளக்கப்படவில்லை; சங்கிரகமாகலின். பிற நூல்களிற் காண்க; அன்றி ஆன்றோர்பாற் கேட்டுணர்க.

---



# ஆரியசித்தாந்தம்.

## உலக ஞானம்.

(28-ம் பக்கத் தொடர்ச்சி.)

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

இப்படிப்பட்ட பயங்கரமான காலம் நீங்கிப்போனபின் பிராமணர்களை முன்னிட்ட சகல பிராணிகளும் முன்போல உண்டாகும். தெய்வச் செயலால் எல்லாம் சுலபமாயுண்டாகும். சூரியன் சந்திரன் பூச நக்ஷத்திரத்துடன் கூடின பிரகஸ்பதி எல்லாம் கிரமமாய்த்தோன்றும். மேகம் இடைவிடாமல் மழை பொழியும். நட்சத்திரங்களும் கிரகங்களும் சுபமாய்த் தோன்றும். கிரகங்கள் மண்டலத்தில் சுபமாய்ச் சுழல்வதினால் எல்லாம் சுபமாயிருக்கும். எங்கும் க்ஷேம முண்டாயிருக்கும். எவ்விடத்திலும் ஏராளமான செல்வமும் சமாதானமும் நிறைந்து சுகமாயிருக்கும். இது எப்படி உண்டாகும் என்றால், காலம் வேறுபட்ட அப்போது கல்கி என்கிற ஒரு பிராமணன் பிறப்பான். அவன் மஹாகாந்தியும் சக்தியும் ஞானமும் உள்ளவனா யிருப்பான். உலம்பலா என்கிற கிராமத்தில் பாக்கியவந்தனான ஒரு பிராமணன் குடும்பத்தில் பிறப்பான். அவன் நினைத்த மாத்திரத்தில் வாகனங்கள் ஆயுதங்கள் போர்வீரர்கள் அஸ்திரங்கள் கவசங்கள் எல்லாம் வந்து அவனுடைய கட்டளையால் நிற்கும். அப்போது அவன் அரசனாய் உலகத்தை ஆளுவான். தர்ம பலத்தினாலே ஜயம்பெற்றுப் பூமியைப் பரிபாலிப்பான். பிரஜைகள் நிறைந்த உலகத்துக்குச் சட்டங்களை உண்டாக்கிச் சமாதானத்தை நிலை நிறுத்துவான். மகிமையும் வலிமையுமுள்ள அந்தப்பிராமணன் எல்லாவற்றையும் அழித்துவிடுவான். அவனே எல்லாவற்றையும் சங்கரிப்பான். அவனே புதிய யுகத்தை உண்டாக்குகிறவன். அவன் பிராமணர்களால் சூழப்பட்டிருப்பான். எவ்விடத்திலும் மிலேச்சர்களைக் கண்டவிடத்திலே சங்கரிப்பான்.

கல்கி எல்லாத் திருடர்களையும் சங்கரித்துவிட்டு ஒரு பெரிய அசுவமேத யாகம் செய்வான். அந்த யாகத்தில் பூமியைப் பிராமணர்களுக்குத் தக்ஷிணையாகக் கொடுத்து விடுவான். பிரமாவினுடைய கட்டளையை நிறைவேற்றிவிட்டுப் புகழத்தக்க நற்கருமங்களையுடைய அந்தக் கல்கி வனத்துக்குப் போய்விடுவான். அவனுடைய ஆசாரங்களை உலகத்து ஜனங்கள் அனுசரிப்பார்கள். பிராமணர்களால் திருடர்களும் கொள்ளைக்காரர்களும் நிர்மூலமான பின் எங்குமாயிருக்கும் உலகத்தைக் கீழ்ப்படுத்திக் கொண்டபின் கல்கி ஈட்டி சூலம் முதலிய ஆயுதங்களைவிட்டுப் பிராமணர்களுக்கு மரியாதை செய்துகொண்டிருப்பான். பிராமணர்களால் வணங்கப்பட்டுப் பூமியில் சஞ்சரித்துக்கொண்டிருப்பான். கற்கி திருடர்களையும் பாபிகளையும் அநியாயக்காரர்களையும் சங்கரிக்கிறபோது அப்பா! அம்மா! குழந்தாய் என்று கதறுகிற சப்தம் எங்கும் கேட்கப்படும்.

அரசனே! கிருதயுகம் தோற்றுகிறபோது இப்படிப் பாபம் ஒழிக்கப்படும். மனிதர்களிடத்தில் தருமம் பெருகி விளங்கும். மதாசார ஒழுக்கங்கள் சரியாய் நடத்தப்பட்டு வரும். பயிரிடப்பட்ட நிலங்களும் தோட்டங்களும் குளங்களும் எங்கும் மலிந்திருக்கும். வேத பாடசாலைகளும் யாகசாலைகளும் கோவில்களும் எங்கும் விளங்கும். பலவகையான யாகங்களும் தொடங்கிச் செய்யப்படும். பிராமணர்கள் யோக்கியர்களும் நல்லவர்களுமா யிருப்பார்கள். தவசுசெய்து ரிஷிகளாவார்கள். துஷ்டர்களால் ஆக்கிரமிக்கப்பட்டிருந்த ஆச்சிரமங்களில் உண்மையான ரிஷிகள் வசிப்பார்கள். ஜனங்கள் எல்லாரும் சத்தியவந்தர்களும் யோக்கியர்களுமா யிருப்பார்கள். பூமியில் விதைக்கப்பட்ட விதைகள் நன்றாகப் பயிராகும். அந்தந்தப் பருவங்களில் அதற்குரிய தானியங்கள் விருத்தியாகும். மனிதர்கள் எல்லாரும் நோன்புகளையும் மதாசாரங்களையும் சரியாய் ஆசரிப்பார்கள். பிராமணர்கள் பக்தியுடன் யாகங்களையும் கருமங்களையும் செய்வார்கள். தெய்வபக்தியுள்ளவர்களாயும் ஆஸ்திகர்களாயும் நற்குண முடையவர்களாயும் யோக்கியர்களாயு மிருப்பார்கள். தர்மாத்மாக்களாயு மிருப்பார்கள். பிராமணர்களுடைய அறுவகைத் தொழில்களும் தவறாமல் நடந்துவரும். அந்தக் கிருதயுகத்தில் அரசர்கள் தர்மமாய்ப் பூமியைப் பரிபாலிப்பார்கள். சௌரிய வீரபராக்கிரம முள்ளாராயிருப்பார்கள். வைசியர்கள் வர்த்தகத்தில் பிரியமுள்ளவர்களாயிருப்பார்கள். நாலுவருணத்தாரும் தத்தம் குலதர்மங்களைப் பரிபாலித்து நல்லொழுக்கமுள்ளவர்களாய் நன்னெறியில் ஒழுகுவார்கள். அரசனே இவ்வாறு தர்மம் கிருதயுக திரேதாயுக துவாபரயுகங்களில் நடக்கும். நான் அழிவற்ற சிரஞ்சீவியாயிருப்பதால் அநேக தடவைகளில் உலகத்தில் நடந்தவற்றைப் பார்த்திருக்கிறேன். நான் நேரில் பார்த்து இருப்பவைகளையே உனக்குச் சொன்னேன். நான் உனக்கு இப்பொழுது கூறிய வருங்காலசம்பவங்களெல்லாம் ரிஷிகளால் கொண்டாடப்படும் வாயுபுராணத்தில் வாயுபகவானால் நன்றாய் விளக்கப்பட்டிருக்கின்றன. நான் படித்து அறிவித்ததும், பிறரிடம் கேட்டுத் தெளிந்ததுமான யுக தருமங்கள் எல்லாவற்றையும் உனக்குச் சொல்லி விட்டேன். நீ தர்மத்தில் மனதைச்செலுத்தி நீதியாய் நட; தர்மமே இகலோக பரலோகங்களுக்குப் பயன் அளிப்பது என்றார்.

திருதராஷ்டிரன், விதுரா! நீ சொன்னவைகளெல்லாம் மனதுக்கு மகிழ்ச்சியைத் தருகின்றன. இன்பமாயும் செவிக்கு இனிமையாயும் இருக்கின்றன. ஆயினும் இவைகள் யுகத்தின் முடிவில் உண்டாவனவா யிருக்கின்றன. இந்தக் கொடிய செய்கைகள் எப்பொழுது தொடங்கும் என்று கேட்டான்.

அரசனே கேளும்: கலியுகம் பிறந்த இரண்டாயிரம் வருஷங்களுக்குப் பின் ஆரம்பமாகும். அப்போது யுக்திவாதங்களைப் பேசுகிறவர்கள் தோன்றுவார்கள். அவர்களால் சில அவைதிக மதங்கள் ஸ்தாபிக்கப்படும். அந்த மதங்களே உலகக்கேட்டுக்கு ஆதாரமாகும். ஏனென்றால் அந்த மதங்கள் அனுஷ்டிப்பதற்குச் சுலபமானவையாக இருப்பதால் அநேகம் பேர் அவற்றைக் கைக்கொள்வார்கள். அரசர்கள் தங்களுக்கு இச்சையான மதத்தைப் பற்றி நடப்பார்கள். அவன் பற்றுகிறதையே பிரஜைகளும் பின் பற்றும். பிறகு வைதிக மதங்களிலேயே பலபிரிவினையுண்டாகும். ஒவ்வொருவரும் தாம் தாம் பெருமைபெறக் கருதி தர்க்க யுக்திகளைக்கொண்டு போலி வைதிகங்களை உண்டாக்குவார்கள். இவற்றால் பிரிவினையுண்டாய்க் கலகங்களும் குழப்பங்களு முண்டாகும். ஜனங்களுக்குள் ஒற்றுமையிராது. அரசர்களும்

இந்த மதக்கலகத்தில் புகுந்து ஒருவரோடு ஒருவர் சண்டையிடுவார்கள். எங்கும் சண்டை சச்சரவுமா யிருக்கும். அச்சமயம் பிற நாட்டரசரும் மிலேச்சர்களும் நாட்டில் பிரவேசித்து இந்தச் சண்டைகளில் கலந்துகொள்வார்கள். கலி ஐயாயிரத்துக்குள் பாதகண்டம் மிலேச்சர்களால் நிறைந்துவிடும். அந்த ஆசாரங்களும் நாட்டில் கலந்துபோகும். நாளடைவில் வைதிக சொரூபம் மறைந்து குறைவுபடும். இதனால் தர்மாசாரங்கள் தலை தடுமாறிப்போம்.

கலியுகம் பிறந்து ஐயாயிர வருஷங்களுக்குள்ளாக இவ்வளவு தீமைகளும் உண்டாய்விடும். ஐயாயிரம் பிறந்தபின் பற்பல அதிசயங்களுண்டாகும். படியாதவர்கள் எல்லாரும் படித்தவர்களாகக் கருதப்படுவார்கள். மிலேச்ச பாஷையும் மிலேச்ச ஆசாரமும் பரவும். மிலேச்சர் கொண்ட மதமே பரவும். வைதிக மதம் மிகவும் குறைவுபடும். குரு முகமாய் வித்தையைத் தெரிந்தவர்கள் அகப்படுவது அரிது. ஒவ்வொருவரும் தமக்குத்தாமே குருவாக இருப்பார்கள். நாஸ்திக மதமும் நாஸ்திக வாதமும் பரவும். தெய்வ ஆராதனை மறக்கப்படும். தர்மம் மிகுதியும் குறையும். தர்மமெல்லாம் டம்பத்தைப்பற்றியே செய்யப்படும். வைதிகச் சடங்குகள் வெறுக்கப்படும். பாவமே சிறந்ததாகக் கருதப்படும். பாபமே புண்ணியம்போலத் தோன்றும். புண்ணிய மெல்லாம் இழிதொழிலாகக் கருதப்படும். புண்ணிய மிதுவென்றும் பாவ மிதுவென்றும் பகுத்தறியும் அறிவு மனிதர்களிடம் குறைந்து தோன்றும். இதனால் தங்கள் மனதுக்குப் பிரியப்பட்டவை யெல்லாம் புண்ணியமாகவும் பிரியப்படாதவை யெல்லாம் பாபமாகவும் கருதப்படும். தெய்வ நிந்தனை அதிகமாகப் பரவும். பகிரங்கமாகப் பிரசங்கமும் செய்வார்கள். அந்தப் பிரசங்கத்தினால் அநேக மந்தமதிகள் தெய்வசம்பத்தை யிழந்துவிடுவார்கள். வேதமும் இதிகாச புராணங்களும் இகழப்படும். ஜனங்கள் வேத சாஸ்திரங்களை வெறுப்பார்கள். பெரியோர்கள் இகழப்படுவார்கள். மூடர்களும் அவைதிகர்களும் புகழப்படுவார்கள். வைதிகர்களும் புத்திமயங்கி தத்தம் கர்மங்களைச் செய்ய நாணுவார்கள். பெண்கள் டம்பத்தில் பிரியப்படுவார்கள். சரியான நெறியில் நடக்க மாட்டார்கள். கல்விமான்கள் என்று பேர்பெற்றவர்களும் கற்புடைமையை வெறுத்துப் பேசுவார்கள். இவைகளால் பெண்கள் மனம் தடுமாறும். தங்கள் கணவர்களை மதிக்க மாட்டார்கள். நகைகள் பூண்பதிலும் உயர்ந்த ஆடைகளை அணிவதிலுமே மனதைச் செலுத்துவார்கள். கணவர்களிடத்தில் வஞ்சனையாகவே நடப்பார்கள். ஏழைகளுக்குப் பிச்சையிட மாட்டார்கள். யாசகர்களைக் கடின வசனங்களைக்கூறித் தூஷித்து மிரட்டுவார்கள். அடிக்கடி பஞ்சமும் பொருட் சேதமும் உண்டாகும். அதிவிருஷ்டி அனாவிருஷ்டிகள் அதிகமாகும். அகால மழை பொழியும், மழையினாலும் வெள்ளத்தினாலும் பயிர்கள் குறைந்து பஞ்சம் உண்டாகும். பிரஜைகள் தங்களுக்குள்ளே கலகம் செய்து சண்டையிடுவார்கள். வருணாசிரம ஜாதிமத சம்பந்தமாக அடிக்கடி போராட்டம் உண்டாகும். இவை யெல்லாம் அடிக்கடி நிகழும். இடைக்கிடையே ஒரு அவதார புருஷன் தோன்றிச் சீர்படுத்துவான். சில காலம் சரியாய் நடக்கும். இப்படி மூன்றரை லட்சம் வருஷங்கள் கலகமுண்டாவதும் அவதார புருஷர்கள் தோன்றிச் சீர்படுத்தித் தர்மத்தை நிலைநிறுத்துவதுமாக இருக்கும். அதற்குமேல் முன்சொன்னபடி முழுமோசமாகும்.

(தொடரும்.)




## ஸ்ரீமான் ஜி. சுப்ரமண்ய ஐயர் அவர்கள்

### S. V. V.

தேச நலம் பெருகுவதற்கு இன்றியமையாத கைங்கரியங்கள் எத்தனையோ பல. ஒரு நாடு தாழ்ந்த நிலைமையில் இருக்கிறதென்றால் அதற் கடிப்படையான காரணங்கள் பல குறைகளைப் பொறுத்திருக்கும். அக்குறைகளைப் போக்க தேசபக்தர்கள் தத்தமக்குச் சுலபமானதாயும், மனப்பான்மைக்குத் தக்கதாயும், உற்சாகத்திற்கு ஒத்ததாயுமுள்ள துறைகளிலிறங்கி வேலை செய்கிறார்கள். இங்ஙனம் தாய்த்தொண்டாற்ற முற்படும் அன்பர்களின் சேவைக்கு அவசியமாக வேண்டிய உறுதிகள் அநேகம். அவற்றைப் பாரதி 'வேண்டும்' என்ற தலைப்பில் பின்வருமாறு கூறுகின்றார்.

"மனதிலுறுதி வேண்டும். வாக்கினிலே யினிமை வேண்டும். நினைவு நல்லது வேண்டும். நெருங்கின பொருள் கைப்பட வேண்டும். கனவு மெய்ப்பட வேண்டும். கைவசமாவது விரைவில் வேண்டும். தனமும் இன்பமும் வேண்டும். தரணியிலே பெருமை வேண்டும். கண் திறந்திட வேண்டும். காரியத்திலுறுதி வேண்டும். பெண் விடுதலை வேண்டும். பெரிய கடவுள் காக்க வேண்டும். மண் பயனுற வேண்டும். வானக மிங்கு தென்பட வேண்டும். உண்மை நின்றிட வேண்டும்."

இவை யனைத்தும் சரிவரப் பொருந்திய தேசபக்தர்கள் நிறைந்த நாடு இடர்களுக்கு ஆளாவதே துர்லபம். அவ்வாறாயினும் நொடிப் பொழுதில் அத்துன்பங்கள் நீங்கி இன்பம் பெருகும்.

நாட்டில் இணையற்ற இன்பம் ஏற்படத் தேசபக்தர்கள் பலரும் ஒவ்வொரு துறையில் வேலை செய்கிறார்கள். எனினும் அவர்களுடைய அபிப்பிராயங்களையும், நாட்டின் உண்மையான குறைபாடுகளையும், அரசாங்கம் அக்குறைகளைப் போக்குதற்குக் கைக்கொள்ளவேண்டிய காரியத்தையும் உண்மையை ஒளிக்காமல், சத்தியத்தை உணர்த்துவதில் சற்றும் பின்வாங்காமல், காலதாமத மன்றியில் அவ்வப்பொழுது வெளியிட்டுத் திகழும் பத்திரிகைகள் இல்லாவிடில் எவ்வளவு தீவிரமான தேச சேவையும் செழிக்க முடியாது. இராஜாங்கத்தாரும் பொதுஜன அபிப்பிராய மென்ன வென்பதை அறிந்து நடக்கவும், பத்திரிகைகளின் இருப்பு அத்யாவஸ்யமான தாகின்றது. நமது நாட்டுமக்கள் முதல் முதலாக விழிப்படைந்த காலத்தை நிர்ணயிக்கவேண்டு

மாலுல் காங்கிரஸ் இயக்கம் தேசத்தில் எப்பொழுது ஆரம்பித்ததென்பதைத் தான் நாம் கணக்கிட்டுப் பார்க்கவேண்டும். காங்கிரஸ் மகாசபையின் இயக்கம் பிரபலமாக இராஜாங்கத்தாரின் அங்கீகாரத்தோடும், பிற தேசத்தாரின் நன்மதிப்போடும் 1885-ம் ஆண்டில் ஆரம்பிக்கப் பெற்றது. இதன் முதல் ஆண்டுவிழா 1885-ம் ஆண்டு டிசம்பர் மீ பம்பாயில் ஸ்ரீ உமேச சந்திர பனர்ஜி அவர்களின் அக்கிராசனத்தில் நடைபெற்றது. காங்கிரஸ் இயக்கம் கண்யத்துடன் வலுவடைந்து வரவே, அதன் உன்னத நோக்கங்களை மகா ஜனங்களிடையே விளக்கமாக எடுத்தோதப் பத்திரிகைகளின் அவசியம் உணரப்பட்டது. ஆகவே, இயல்பாக இவ்வுணர்ச்சித் தமிழ் நாட்டிலும் ஏற்பட்டது. தேசத்தின் சுவாஸக் கருவியான இப்பணியை முன்வந்து முதல் முதல் ஆரம்பித்தவர் ஸ்ரீமான் ஜி. சுப்ரமண்ய ஐயர் அவர்களே யாவார். நதியின் சங்கமஸ்தானத்திலிருந்து அதன் கரையோரமாய்ப் போகும்போது, அது உற்பத்தியான மகத்தான மலை தென்படுவதுபோல், பத்திரிகை உலகமான நதியின் கரை வழியே செல்வோமானுல் 'ஐயர் மலை' யானது அரிதில் நமது கண் முன் படும்.

இப்பெரியார் 1855-ம௵ ஜனவரி மாதத்தில் 'கங்கையிற் புனிதமாய காவிரி' யாறு துங்கமாய்ப் பாயும் 'பஞ்சநத க்ஷேத்திரம்' என்னும் திருவையாற்றில் திருவவதரித்தவர். இவருடைய தந்தையான ஸ்ரீமான். கணபதி தீக்ஷிதர், திருவையாறு முன்சீப் கோர்ட்டில் வக்கீல் தொழில் நடத்தி வந்தார். இவருக்கு எழுபுத்திரர்களிருந்தார்கள். அவர்களுள் ஐயரவர்கள் நான்காவது புதல்வர். இவர் இளமையில் முறைப்படி வித்யாரம்பம் செய்விக்கப் பெற்று, திருவையாற்றிலுள்ள பள்ளிக்கூடத்தில் வாசித்து வந்தார். அங்குப் படிப்பு முடிந்ததும் தஞ்சையிலுள்ள செயிண்ட் பீடர்ஸ் காலேஜில் சேர்ந்து கல்வி பயின்று 1871-ம் ஆண்டில் மிதரிலைப் பரீக்ஷை (Matriculation) யில் தேறினுர். பின்னர், 1873-ம் வருடத்தில் எப். ஏ, பரீக்ஷையில் தேறினுர். அப்பொழுது தஞ்சையில் அதற்குமேல் படிப்பு இல்லை. ஐயரவர்கள் எந்தத் துறை உத்தியோகத்திற்கு வாசிப்பது என்று யோசித்துக் கடைசியில்,

> கண்ணுடைய ரென்பவர் கற்ருேர் முகத்திரண்டு
> புண்ணுடையர் கல்லா தவர்.

என்னும் பொதுமறைக்கிணங்க, அவ்வளவு உயர்ந்த வித்தையை அபிவிருத்தி செய்யும் உபாத்திமைத் தொழிலையே சிறந்ததாகக் கருதிச் சென்னையிலிருந்த 'நார்மல்' ஸ்கூலில் சேர்ந்து 1874-ல் பயின்ருர். அதன்மேல், 1875-ல் சென்னைபுரியிலுள்ள 'சர்ச் ஆப் ஸ்காட்லண்டு மிஷன் ஸ்கூலில்' நாற்பது ரூபாய் சம்பளத்தில் ஓர் ஆசிரியர் வேலையை ஒப்புக்கொண்டார். அக்காலத்தில் சென்னையில் பச்சையப்பன் கலாசாலை மிகவும் பிரபலமாக நடந்து வந்தது. அக்கலாசாலையில் ஐயரவர்களுக்கு ஓர் ஆசிரியர் பதவி கிடைத்தது.

பிற்காலத்தில் 'ஹிந்து' பத்திரிகையின் முன்னேற்றத்தில் ஐயரவர்களுடன் ஒத்துழைத்தவரான காலஞ்சென்ற ஸ்ரீமான் விஜயராகவாச்சாரியார் அவர்கள் அப்பொழுது பி. ஏ. வகுப்பில் வாசித்துக்கொண்டிருந்தார். இக் காலத்தில் இவ்விருவருக்கும் அந்யோன்ய ஸ்நேகம் ஏற்பட்டது. கலாசாலையிற் சேராமலே தனியே வாசித்து ஐயரவர்கள் 1877–ல் பி. ஏ. பரீக்ஷையிலும் தேறினார். ஐயரவர்களின் உற்சாகத்தோடு கூடிய உழைப்பைக் கண்டு திருவல்லிக்கேணி ஆங்கிலோ-வர்னகுலர் ஸ்கூல் அதிபர் அவரை அதன் தலைமை யாசிரியராக ஏற்றுக் கொண்டார்.

இதுமுதல் அவருக்கு விசேஷமான நற்காலம் ஏற்பட்டது. அவருடைய உண்மையான பெருமைகளும் தேசத்தொண்டும் வியாபகமடைய வாரம்பித்தன. இக்காலத்தில் பொதுமக்களின் குறைகளைத் தெளிவாகவும் வெளிப்படையாகவும் எடுத்துச் சொல்லக்கூடிய ஓர் தேசீயப் பத்திரிகை இல்லாத குறையை யாவரும் உணர்ந்தார்கள். ஐயரவர்கள் இக்குறையைப் போக்க அஞ்சாது முன்வந்தார். ஒரு தேசீயப் பத்திரிகையை ஆரம்பித்துப் பொறுப்பாக நடத்துவதிலுள்ள கஷ்டங்களை அவர் நன்கு அறிந்தவரானாலும் உற்சாகத்துடன் துணிந்து 'ஹிந்து' என்ற பெயர் சூட்டி, காலஞ்சென்ற ஸ்ரீமான் விஜயராகவாச்சாரியாரைத் துணையாகக்கொண்டு ஓர் வாரப்பத்திரிகையை ஆரம்பித்தார். விரைவில் 'ஹிந்து' வாரம் மும்முறையாக்கப்பட்டு, கொஞ்சகாலத்திற்குள் தினசரியாயிற்று. ஹிந்துப் பத்திரிகையின் ஆசிரியர் பதவியை ஐயரவர்கள் இருபதாண்டுகள் வகித்துப் பின்பு சில சௌகரியக் குறைவுகள் ஏற்பட 1898-ல் விலகிக் கொண்டார். அவர் காலத்தில் 'ஹிந்து' பத்திரிகை மகோந்நத நிலையை யெய்திற்று. 'இந்தியா முழுதும் அதற்கு நிகரான பத்திரிகை யில்லை' என்று புகழப் பெற்றது. இத்தகைய பெருமைகளுக்கெல்லாம் பொது ஜனங்களின் சத்தியமான குறைகளையும் அவர்களின் தேவைகளையும் தக்கபடி உணர்த்துவதில் அது கண்ணுங் கருத்துமாயிருந்ததே காரணமாகும். மே. த. கவர்னர் ஜெனரல் லார்ட் ரிப்பன் துரைமகனார் 'இந்தியாவின் உண்மையான குறைகள் என்னவென்று அறிய வேண்டுமானால் உடனே ஹிந்து பத்திரிகையைப் பாருங்கள்' என்று கூறுவது வழக்கம். பின்னர், ஹிந்து பத்திரிகையினின்றும் விலகிக்கொண்டு ஐயரவர்கள் 1898-ல் 'ஐக்கிய இந்தியா' (United India) என்ற வாரப் பத்திரிகையை ஆரம்பித்தார். ஆனால் கொஞ்ச காலத்திற்குள் அதையும் விட்டு அவர் விலக நேர்ந்தது.

'ஹிந்து'வை அவர் மிக்க தேசோபகாரமான வகையில் நடத்திக் கொண்டு வரும்பொழுதே, சகல ஜனங்களும் தத்தம் குறைகளை எடுத்துக் கூறவும், ஆங்கிலந் தெரியாதவர்களும் தேச கைங்கரியத்தில் பாத்தியமுள்ள தத்தம் பங்கை அடையவும் ஓர் தமிழ்ப் பத்திரிகையைத் தொடங்க வேண்டுமென்ற அவா அவருக்கிருந்தது. அதற்கான சாதனங்களையும் அவர் தேடிக்

கொண்டிருந்தார். இவ்வெண்ணம் 1882-ல் பூர்த்தியாயிற்று. முதலில் அவர் 'சுதேசமித்திர'னை வாரப்பத்திரிகையாக அந்த வருஷத்தில் ஆரம்பித்தார். கொஞ்ச காலத்தில் அது தினசரியாக்கப்பட்டுத் தமிழ்நாடு முழுதும் வியாபித்து முன்னின்று அருமையாக உழைக்க வாரம்பித்தது. தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளில் ராஜீய நிலை இன்னதென்றறியாமலும் நித்திரையின் வசமாயிருந்த மக்களனைவரையும் 'சுதேசமித்திரன்' தட்டியெழுப்பி, அன்றன்று உலக சமாச்சாரங்களையும் தன்னிடத்தே கொண்டு நிகரற்ற தேச சேவை செய்து வந்தது. இன்றும் தகைமையோடு தாயின் தண்பணி யாற்றி வருகின்றது. முதன்முதலாகத் தமிழுலகத்திற்குப் பத்திரிகை உணர்ச்சியை அளித்தவரும். ஆரம்பித்து நடத்தியவரும், அத்துறையில் நிகரற்று விளங்கியவரும் ஐயரவர்களே யாவர்.

அகில இந்திய காங்கிரஸ் மகாசபை ஆரம்பித்த காலம்முதல் ஐயரவர்கள் அதன் தாஸராக விளங்கினார்; முதல் காங்கிரஸில் முதல் முதலாக முதல் தீர்மானத்தைக் கொண்டுபோய் நிறைவேற்றினார். ஒவ்வொரு காங்கிரஸ் மகாசபையின் வருடோத்ஸவங்களுக்கும், விசேஷக் கூட்டங்களுக்கும் அவர் தவறாது செல்வார். காங்கிரஸ் சரித்திரத்தின் பூர்வாங்க பாகத்தை எடுத்துப் பார்த்தால் அம் மகா சபையில் நிறைவேறியுள்ள முக்கியமான தீர்மானங்களெல்லாம் ஐயரவர்களாலே பிரேரிபிக்கப்பட்டு ஏகமனதாய், நிறைவேறி வந்திருப்பதைக் காணலாம். ஐயரவர்கள் துரிதமாகப் பேசக்கூடிய பெரிய சொற்பொழிவாளரல்லாவிட்டாலும், திடமாகவும் வன்மையோடும் தெளிவாகவும் உற்சாகத்துடனும் பிரசங்கிக்கக் கூடியவரென்பதை மேதாவிகளனைவரும் ஒப்புக்கொண் டிருக்கிறார்கள். 1902-ம் வருஷத்தில் காக்கிநாடாவில் நடைபெற்ற சென்னை மாகாண மகாநாட்டிலிருந்து அவர் பிரபல தேச பக்தராகக் கொண்டாடப் பெற்றார். அம் மகா நாட்டில் அவரியற்றிய அக்கிராசனப் பிரசங்கத்தைத் தேசத்தில் நானாபக்கங்களிலுள்ள தலைவர்களெல்லோரும் படித்துப் பார்த்துவிட்டு ராஜீயநிலையை நிர்ணயித்து, தேசத்தின் எதிர்கால விஷயங்களைக் கணித்து அவர் கூறியிருந்தவற்றைக் கண்டு ஆச்சரியமடைந்து போற்றுதல் கடிதங்கள் விடுத்தார்கள். 1907-ம் ஆண்டில் நடைபெற்ற சித்தூர் ஜில்லா மகாநாட்டில் அவர் தலைமை வகித்தார். ஸ்ரீயான் ஐயரவர்களுடைய திறமையை உள்ளவாறு அறிய விரும்பும் ஒருவர் அவருடைய சித்தூர் மகாநாட்டு அக்கிராசனப் பிரசங்கத்தைமட்டும் ஒரு முறை படித்தால் போதும். சித்தூர் ஜில்லா வாசிகள் அவர் தலைமை மகாநாடு நடத்தியதையும், அம்மகாநாட்டில் அவரியற்றிய அக்கிராசனப் பிரசங்கத்தை அதிமேதாவிகளெல்லோரும் புகழ்ந்து பாராட்டியதையும் கண்டு, தஞ்சை ஜில்லா வாசிகள் 1908-ல் தாமும் அவரது தலைமையில் ஓர் ஜில்லா மகாநாடு கூட்டினார்கள்.

1898-ல் இந்திய செலவு திட்டத்தைக் குறித்து ஆராய்ச்சி செய்ய இங்கிலாந்தில் 'ராயல் கமிஷன்' நியமிக்கப்பட்ட பொழுது, சென்னை மாகாணப் பிரதிநிதியாக ஸ்ரீமான் ஐயரவர்கள் சாக்ஷியம் கொடுக்க அழைக்கப் பெற்றார். அவர் கொடுத்த சாக்ஷியத்தி லிருந்துதான் "இந்தியரின் உண்மையான வாழ்க்கை இன்னது; அவர்களின் தேவைகள் இவை" என்பதை ஐரோப்பியர்கள் தெளிவாக அறிந்து கொள்ள முடிந்தது. தேச முழுவதும் சுற்றுப் பிரயாணங்கள் செய்து மக்களின் உண்மையான தாழ்ந்த நிலையையும்

அரசாங்கத்தார் பொதுப்படக் காட்டிவரும் அனுதாபத்தையும், அனுஷ்டித்து வரும் உபாயங்களையும், அவற்றிலுள்ள தத்துவங்களையும் அவர் நாளடைவில் நன்கு அறிந்து, பின்னர் பழைய சீர்திருத்தக் கொள்கையினரின் கும்பலி லிருந்து விலகினார். நாடு அடைந்துள்ள பரிதாப நிலையைக் கண்டு, தேச மெங்கும் உயர்ந்த கைத்தொழில்கள் நசுக்கப்பட்டு மக்கள் திண்டாடுவதைக் கண்ணால் பார்த்து அவர் மனம் பதறினார். 'வெளி நாட்டுப் பொருள்களை பகிஷ்கரித்தல், சுதேசப் பொருள்களை ஆதரித்தல்' என்ற கொள்கையோடு தோன்றிய 'சுதேசி' இயக்கத்தில் அவர் தளராமல் முன்னணியில் நின்றுழைத் தார். சுதேச இயக்கத்திற்குத் தமிழ்நாடு ஏதாவது தனது பங்கைச் செலுத்தி யிருக்குமானால் அதற்குக் காரணர் ஸ்ரீமான் ஐயரவர்களே யாவர். தமது தேக நலமின்மையையும் பொருட் படுத்தாமல் தமிழ் நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து சுதேசத் தத்துவத்தைப் பிரசாரம் செயதவரும் அவரே யாவார்.

தேசத்தில் ஜனசாரம் பரவ வேண்டியது அவசியம் என்பதை ஆவலுடன் ஏற்று அதன் பொருட்டாகத் தமிழ் நாட்டில் உழைக்க உடனே முன் வந்தவரும் அவரே. மனதிலொன்றும், செய்கையி லொன்றும், வாக்கி லொன்றுமாக மாடா விநோதம் புரியும் ஜனசார சீர்திருத்த தந்திரங்கள் அவருடைய ஜீவ்யத்தின் எந்தப் பாகத்திலும் எதன் பொருட்டும் இருந்த தில்லை. அவர் தமது விதந்துவான பெண்ணுக்கு, இடையூறுகளெல்லா வற்றையும் எதிர்த்து நின்று புனர் விவாகம் செய்த தன்மையே இதனை விளக்கச் சாலும். அந்தச் சத்யமான தன்னலமற்ற உழைப்பால் தான் தமிழ் நாடு முழுதும் அவருடைய பேனா முனையில் ஆடும் பெரும் புகழை அவர் ஈட்டினார். 'சத்ய முண்டானால் மனமே! எவ்வளவு இடையூறுகள் வந்தா லும் ஜயமுண்டு. உனது மனத்தேரை நீ நடத்து' என்று அவர் ஆதிமுதல் அசைக்க முடியாத ஓர் ஸ்தம்பமாக நின்று, தமது சிரசிலுள்ள ஞானமாகிய விளக்கால் தமிழ்நாடு முழுவதும் ஒளி தந்தார். இன்னும் சென்னை நகர பரிபாலன சபையின் வாயிலாக அவரால் ஏற்பட்டுள்ள நன்மைகள் எத்தனையோ பல.

பாம் விஷயத்திற்குப் பின் தோன்றிய அடக்கு முறையில் உண்மை தேச பக்தரான ஸ்ரீமான் ஐயரவர்கள் அரசாங்கத்தாரின் அழலுக்கு ஆளா யினர். ராஜ விரோதமான குற்றத்திற்காக அவர் 1909-ல் கைது செய்யப் பட்டார். ஆனால் விசாரணையில் அரசாங்கத்தார் தமது குற்றப் பத்திரிகையை வாப்பீஸ் பெற்றுக் கொண்டார்கள்.

பத்திரிகை உலகத்திற்கு முதல் முதலாகக் கண் திறந்து வைத்தவர் ஸ்ரீமான் ஐயரவர்களே. இன்று நாம் பத்திரிகைகளைக் கையிலெடுத்து வாசிக்கவும், அதன் மூலமாய் நன்மைகள் பலவற்றை அடையவும் உள்ள நிலையைக் கருதும்போது ஐயரவர்களை நினைக்காமலிருக்க முடியாது. பத்திரிகை உலகம் அவருக்கு ஓர் தனிப்பெரும் ஆலயம் கட்டவும் கடமைப் பட்டிருக்கின்றதென்று கூறுவதும் மிகையாகாது.

---

# திருநாவுக்கரசு சுவாமிகள் மாட்சி

தமிழ்ப்பண்டிதர் ஆ. கமலநாத முதலியார்.

## கடவுள் துதி.

அறிவிற்கறிவா மானந்தனழகாரச்சுக் கூடமதில்
செறியுங்கலைகளெலாம் போற்றுஞ் சீலமுடையவாசிரியர்
குறியாரப்பர் சம்பந்தர் குலவும் நம்பியாரூரர்
நெறியார் வாதவூரிரரிவர் நேடும்பொருளைப் போற்றுதுமே. (1)

சைவத்தின் பெருமையும் அச்சைவத்தில் விதந்து கூறும் தெய்வத்தின் கொள்கையினையும், அத்தெய்வத்தை யடைந்தார் பெரும் பேற்றினையும் யாவரும் எளிதிலுணர்ந்து கொள்ளப் போதிக்கும் சைவசமயாசாரியர்கள் நால்வரையும் போற்றித் துதித்து, அந்நால்வரில் ஒருவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் சிவபெருமானுக்கியற்றிய தொண்டின் பெருமையினை முதலி லெடுத்துச் சுருக்கிக் கூறுகின்றேன்.

பரவுந் திருவாமூரதனில் பன்னும் புகழனார்தவத்தால்
அரவுமதியுமணிந்த சடையானருளா லவனியெலாம்
கரவேயின்றிக் கதியடையக் காட்டுமப்ப ரென்றுசொலும்
உரவார் நாவுக்கரசுதனை யுன்னியுளத்தில் போற்றிடுவாம். (2)

உலகமெல்லாம் போற்றும் திருமுனைப்பாடி நாட்டிலேயுள்ள திருவாமூரிலே குறுக்கையர் குடியிலே எந்நாளும் அடுத்தவர்களைப் பாதுகாக்கும் வேளாண் மரபிலே சுமார் 1475 வருடங்களுக்குமுன் புகழனாரென்பவர் ஒருவர் இருந்தார். இவர் கல்வி, அறிவு, அடக்கம், வாய்மை, ஒழுக்கம், ஈகை, புகழ் முதலிய குணங்களிலே சிறக்கப்பெற்றவர். இவர் கற்புக்கரசியாகிய புனிதவதியா ரென்பவரை விவாகஞ் செய்துகொண்டு, தென்புலத்தார், தெய்வம், விருந்தோம்பல், சுற்றந்தழுவல், கபிலை பூசைசெய்தல் முதலியவைகளை யெல்லாம் ஒழுங்காகச் செய்துவந்தார். இவர் பத்தினியாராகிய மாதினியார் தம் நாயகனையே தெய்வமாகப் போற்றும் பெருமையுடையவராயும், சிவபெருமானையும், சிவபெருமானது அடியவர்களையும், போற்றித் துதிக்கும் நெறியையுடையவராயு மிருந்தார். இத்தகைய பெருமையினாலும், இந்நிலவுலகம் செய்த புண்ணியப் பேற்றினாலும், சைவமதம் புரிந்ததவத்தினாலும், இவர்பால் திலகவதியா ரென்னும் அம்மையார் தோன்றினார். இவர் தோன்றிய சில ஆண்டுகளுக்குப் பின் சிவபெருமான் திருவருளினாலே உலகமெல்லாமீடேறவும், சைவமென்னும் பயிர் தழையவும், அஞ்ஞான மென்னு மிருள் விலகவும், மருள்நீக்கியா ரென்பவர் திருவவதாரஞ் செய்தார்.

சிவபெருமான் முதலியவர்கள் இவரை அறுபத்து மூன்று நாயன்மார்களிலே ஒருவராகத் தேர்ந்தெடுத்திருக்கின்றனர். அவற்றை உலகினர்களுக்குச் சிவபெருமான் நன்கு விளங்கும்பொருட்டு அருண்மொழித் தேவருக்கு உலகெலா முணர்ந்தோதற்கரியவன் என்று முதலடி யெடுத்துக் கொடுத்துத் திருத்தொண்டர் புராணத்தைப் பாடும்படியாய்த் திருவருள் புரிந்தார். சேக்கிழார் சுவாமிகளும் நடராஜப்பெருமான் திருவாய் மலர்ந்தருளியபடியே புராணத்தைப் பாடி முடித்தார். அங்ஙனம் பாடிப் பூர்த்தி செய்வித்த புராணத்தின் முதற்செய்யுளாகிய "உலகெலா முணர்ந்தோதற்கரியவன்" என்னும்

திருப்பாட்டில் அறுபத்து மூன்றெழுத்துக்களே அமைந்திருக்கின்றது. ஆகையால் இப்பாசுரம் அறுபத்து மூன்று நாயன்மார்களுக்கே பாடப்பட்டதென்று தெள்ளிதின் உணர்தற்குரியவையா யிருக்கின்றது. அன்றியும் இவரைச் சைவசமயத்தாராலே போற்றப்படும் சைவசமயாசாரியர்கள் நால்வரில் ஒருவரெனக் கொள்ளவேண்டியதாயு மிருக்கிறது. இச் சைவ சமயாசாரியர்கள் நால்வர்களுக்கும், எல்லாச் சிவத்தலங்களினும், எல்லாச் சைவமடங்களினும், எல்லாச் சிவனடியார் கூட்டங்களினும், குருபூசையும் நித்திய பூசையும், உற்சவாதி முதலியவைகளும், நிகழ்ந்தேறிவருகின்றன. இச் சைவ சமயாசாரியர்கள் நால்வர்களிலே முந்தினவர் ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள். இவரைப்பற்றித் தொண்டர் புராணத்தில் எடுத்துப் பேசவில்லை. திருவிளையாடற் புராணத்தில் ஸ்ரீமத் பரஞ்சோதி மாமுனிவரும், திருவாதவூரர் புராணத்தில் கடவுள் மகாமுனிவரும் புகழ்ந்து பாடியிருக்கின்றார்கள். இம் மாணிக்கவாசக சுவாமியை, திருநாவுக்கரசு சுவாமிகள் தாம் பாடிய தேவாரத்தின் கண்ணே ஸ்ரீமத் மாணிக்கவாசகப் பெருமானுக்காக நரியைப் பரியாகச் செய்தவனே யென்று சிவபெருமானைத் தோத்திரஞ் செய்திருக்கின்றார். அவை வருமாறு:—

## திருவாரூர்த் தேவாரம்.

நரியைக் குதிரை செய்வானும்
நரகரைத் தேவு செய்வானும்
விரதங் கொண்டாட வல்லானும்
விச்சின்றி நாறு செய்வானும்
முரசதிர்ந்தானை முன்னோட
முன் பணிந்தன் பர்களேத்த
அரவரைச் சார்த்தி நின்றானும்
ஆரூரமர்ந்த அம்மானே"—

என்று பாடி யிருக்குந் தேவாரத்தினாலே இச் சைவ சமயாசாரியர்கள் நால்வர்களிலும் முந்தினவர் ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகளென்றே கொள்ள வேண்டும்.

திருஞானசம்பந்த சுவாமிகளும், திருநாவுக்கரசு சுவாமிகளும் ஒரே காலத்தில் இருந்திருக்கிறார்க ளென்பதை விளக்கப் பெரிய புராணத்தில் அனேக காரணங்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இவ்விருவர்களுக்குப் பின் சுந்தரமூர்த்திச் சுவாமிகள் திருவவதாரஞ் செய்துள்ளதைச் சிவபெருமான் சுந்தரமூர்த்திச் சுவாமிகளுக்குத் தொண்டர்களை யெல்லாம் தனித் தனியே போற்றித் துதிக்கும்படிக் கட்டளையிட்டுத் தாமே அவருக்குத் தில்லை வாழந்தணர் தம்மடியார்க்குமடியே னென்று முதலடி யெடுத்துக் கொடுத்துள்ளார். இதனால் ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள், திருஞான சம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், இவர்கள் காலத்திற்குப் பிற்பட்டவரென்றே துணிந்து பேசுதற்குத் தகுதியேயாகும். இவற்றை விளக்கத் தொண்டர் புராணத்திலும் பல ஆதாரங்கள் உள்ளனவென்பது சாலவுந் தோன்றும். இவை நிற்க,

மருள் நீக்கியாருக்குத் தந்தை உரிய பருவத்திலே கலை பயிலுவித்தார். அவர் சகல கலைகளையுங் கற்றுத் தேர்ச்சியடைந்தார்; திலகவதியாருக்குப் பன்னிரண்டு வயதாகவே அரசனிடத்தில் சேனாதிபதியா யிருக்கப்பெற்ற

வரும், சிவநேசமுடையவரும், வேளாண் மரபினருமாகிய கலிப்பகை நாயனர், திலதவதியாரை மணஞ்செய்ய விரும்பிப் புகழனரிடம் சில முதியோர்களை யனுப்பினர். அவர் புகழனரிடம் வந்து தெரிவிக்க, அப்புகழனரும், பெண் கொடுப்பதாகச் சொல்லிச் சம்மதித்தனர். கலிப்பகையார் தம் திருமணத்திற்கு முன்னமே அரசனுணைப்படி வடதேசஞ் சென்று பகையரசர்களிடம் யுத்தஞ் செய்துகொண்டிருந்தார். அக்காலம் புண்ணிய மூர்த்தியாகிய புகழனர் சிவபதமடைந்தார். அவர் மனைவியாராகிய மாதினியாரும் உடன் கட்டையேறினர். பின்னர் திலதவதியாரும், மருள்நீக்கியாரும், சுற்றத்தவர்கள் முதலானவர்களெல்லாந் தேற்றத் தாய் தந்தையர்களுக்குச் செய்யவேண்டிய கடன்களை யெல்லாம் செவ்வனே செய்து முடித்தார்கள். இவை நிற்க வேற்றரசர்களோடு போருக்குச் சென்ற கலிப்பகையார், யுத்த களத்திலே பூதவுடம்பை நீத்துப் புகழுடம் பெய்தின ரென்பதைத் திலதவதியார் கேள்வியுற்று, இறக்கத்துணிய மருள் நீக்கியார் தன் தமக்கையாரை நோக்கி நம் தாய் தந்தையர்களிறந்தும் தங்களையே நான் தாய் தந்தையர்களாகக் கொண்டுள்ளேன். தாங்கள் உயிர் நீப்பின் தங்களுக்கு முன்னரே நானும் உயிர்விடுவே னென்று கூறினர். அதைக் கேட்ட அம்மையார் காருண்ய முடையவராகித் தம்பியார் உயிர் வாழவேண்டுமென்றும், நம் சந்ததி விளங்கவேண்டுமென்றும், யோசனை செய்து உயிர் நீக்காமல் இருந்த பொருள்களை யெல்லாம் சிவபுண்ணியத்துக்கே உபயோகமாகும்படிச் செய்தும், குளம் தோண்டுதல் நந்தவனம் வைத்தல் முதலிய திருப்பணிகளைப் புரிந்தும், தாமும் சிவாலயத்திலே பலவிதத் தொண்டுகள் முதலியவற்றை யியற்றியும்வந்தார். (தொடரும்)

## வீரவாகுதேவர் உற்பத்தி.

பார்வதியாரின் காற்சிலம்பிலிருந்து நவமணிகள் தோன்றின. அம்மணிகளைப் பார்வதியார் திருக்கண் சாத்த ஒன்பது பெண்களாயினர்கள். அவ்வொன்பதின்மரையும் சிவபெருமான் நோக்க அவர்கள் கருக்கொண்டனர். அதனுல் பார்வதி கோபிக்கக் கருவுயிர்த்திலர். பின்னர் அப்பெண்கள் உமையைப் பூசித்து நவவீரரைப் பெற்றனர். அவர்களிலே மூத்தவர் வீரவாகு தேவர்.

# கண்வழி நுழைந்த கள்வன்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பி. ஏ.

பண்டைத் தமிழகத்து எழுந்த பெருநூல்களி லெல்லாம், மக்களால், அன்றும், இன்றும், என்றும் போற்றத்தக்கதாய் அமைந்த நூல்கள் சிலவேயாம். அவைகளில் கம்பரது இராமாயணம் என்னும் பெருநூல், தமிழகத்துப் பெரும்புலவர் பலராலும் இன்றும் நன்கு பாராட்டப்படுகின்றது. காரணம் என்னே? எனின், இந்நிலவுலகி லெழுந்த, வள்ளுவர் பெருமான் என்னும் மாப்பெரும் புலவரை ஒப்ப, இவர் தனது புகழுடம்பு நிலைபெற நிறுவிய இராமகாதையில் பயிலப்படுங் கருத்துக்கள் தான் வாழ்ந்த, தமிழகத்து மக்களின் கருத்துக்குப் பெரிதும் இயைந்ததாயும், மற்றும் எல்லோராலும், எக்காலத்தும் ஒப்ப முடிந்ததாயும் அமைந்ததேயாகும். நிற்க, இன்று எடுத்துக்கொண்ட தலையங்கம், "கண்வழி நுழைந்த கள்வன்" என்பது. என்னே! கள்வனுங் கள்வன் அவனும் கண்வழி நுழைந்தான். சித்திரத்தில் விசித்திரம்போலும் என்று பலர் எள்ளி நகையாடலாம். ஆனல் இத்தலையங்கமான சொற்றொடர், கவியரசர் கம்பர் பெருமானல் அருளப்பட்ட ஒரு சொற்றொடர், ஆகும். கம்பர் பெருமான் தனது காவியத்தில் எடுத்தாளும் ஒவ்வொரு சொல்லும்—என்!—ஒவ்வொரு எழுத்துங்கூட காரணமின்றி எடுத்தாண்டிரார் என்பதை கம்பராமாயணத்தை ஊன்றி வாசித்தோர் நன்குணர்வர். ஆகவே, இச் சொற்றொடரின் பொருண்மைகளை யெல்லாம் ஆராயவே இக்கட்டுரை எழுந்ததாகும்.

மிதிலைமா நகரில், அரசமாளிகையின் கன்னிமாடத்து மேடையில் நிற்கின்ருள் சீதை. தெருவூடே, முனிவர் முன்செலத் தம்பி பின்வரச் செல்கின்ருன் இராமன். இருவரும் ஒருவரை யொருவர் பார்க்கின்றனர். ஒருவரது உள்ளத்தை ஒருவரது உள்ளம் ஈர்க்கின்றது. இருவரது கருத்தும் ஒருமித்து ஆதரவு படுகின்றன. பின்னர் தன்வழியே சென்ற இராமன் சீதையின் கண்ணிற்கு மறைகின்ருன். அப்பொழுது அவள் தனியே யிருந்து புலம்பும் மாற்றத்தில் தன் கன்னிமாடத்தில் புகுந்து தன்காதலைக் கவர்ந்து சென்ற காதலனுக்கு "கண்வழி நுழைந்த கள்வன்" என்னும் திருப்பெயர் சூட்டுகின்ருள். இவ்விடத்து.

> "பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
> எண்வழி யுணர்வுநான் எங்குங் காண்கிலேன்
> மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
> கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்"

என்று கவியரசர் கம்பர் பெருமான் கவியாற்றுகின்ருர். இச்சொற்றொடரை ஆராயுமிடத்துக் காணும் உண்மைகள் பல. வான்மீகியினது முதனூலாம் இராமாயணத்தினின்றும் ஒரோவிடங்களில் கம்பர் மாறுபட்டு, தன் தமிழ்நாட்டுப் பழக்க வழக்கங்களுக்கேற்ப கதையை மாற்றியும் திருத்திச் செப்பம் செய்துகொள்வதற்கு இது ஒரு சான்ருக அமைகின்றது. மிதிலைமா நகரில், சனகனது அரசவையில் அளவில் ஆற்றல் வாய்ந்த அவனது வில்லை இறுத்ததற்கு இராமன் பரிசாகப்பெற்ற வான்மீகரது சீதை, அன்புடை அண்ணலைக் கண்

ணால் கண்டு, காதலால் பிணிப்புண்டு கணவனுக்கேற்ற கம்பராது சீதையாய் இலங்குகின்றுள்.

நிற்க. இனி கள்வன் என்ற பதத்தின் பொருள்தானென்னை என்று பார்ப்பாம். "கள்வன் என்கிளவி கரியோன் என்ப" என்பது திவாகரம் "கடகரிப் பெயரும் கருநிற மகனும் கற்கடக இராசியும் ஞெண்டுங் கள்வன்" என்பவர் பிங்கலந்தையார். "கள்வனே, முசு, ஞெண்டு, யானை, கருநிறத் தவனே சோரன்" என்பர் சூடாமணியார். ஆதலால் கள்வன் என்னும் பதம் கரியவன் என்ற பொருளிலேயே பண்டைத்தமிழ் நூல்களில் எல்லாம் பயிலப் பெற்றிருந்தது என்பது பெற்றும். கருநிற மகனும் இராமனுக்கு இது பொருத்தமான பட்டமேயாகும். இன்னும் கள்வன் என்னுஞ்சொல் பிறர் பொருள் வெளவுவோன் என்ற பொருளிலும் வழங்கப்படுகின்றது. தனக்குரிமையற்ற ஒரு பொருளை உரிமையாக்குதலும், தனக்குரிய பொருள் பிறன் ஒருவனிடத்து வறிதேயிருக்குமாயின் அதனை வலிந்து கைப்பற்றுத லும் களவு எனவே கூறுவர் பெரியோர். இதில் முன்னையது பலராலுங் கடியப்பட்டாலும், பின்னையது பலராலும் போற்றப்படும். இவ்விடத்து இராமனும், தனக்குரிய பொருளாகிய சீதையை, மிதிலைமா நகரிலிருந்து களவாடிச் செல்வது பலர் போற்றத்தகுந்த ஒரு செயலாகுமேயன்றி, இழித் துக்கூறும் ஒரு செயலல்ல. எக்காரணம் பற்றியும், இராமன் கள்வன் என் னும் பெயருக்குப் பொருத்தமானவனேயாம்.

இனி, தமிழ்மொழியின் சிறப்புடை இலக்கணமாகக் கருதப்படும், அகத் துறையில் களவு எனும் பதம் எவ்வாறு பாராட்டப்படுகின்றது என்று பார்ப் போம். இத்துடன் களவின் இலக்கணம், கள்வனது மனப்பான்மை, களவு செய்தற்குரிய காலம், இடம், பொருள், வழி இவைகளையும் ஆராய வேண்டுவது நமது கடமையாகும். இவைகளை யெல்லாம் கம்பர் தனது காவியத்தில், இராமனிடத்து எவ்வாறமைத்துக் காட்டுகின்றார் என்று பார்ப்பாம். ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியத்துள், களவின் இலக் கணம் கூறப்புகுந்த தோல்காப்பியர்,

"வேட்கை, ஒருதலை உள்ளுதல், மெலிதல்
ஆக்கஞ்செப்பல், நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றச்
சிறப்புடை மரபினவை களவெனமொழிப"

என்று கூறுகின்றார், இவ்விடத்து அகப்பொருட் கருத்துக்களெல்லாம் பொதிந்து விளங்க, களவியலின் தன்மை கூறப்படுகின்றது.

"நோமுறுநோய் நிலை நுவல கிற்றிலள்
ஊமரின் மனத்திடை உன்னி விம்முவாள்" என்றும்,

"சுழலிடுகூந்தலுந் துகிலுஞ் சோர்தரத்
தழலிடு வல்லியேபோலச் சாம்பினுள்" என்றும்,

"வெம்புறு மனத்தனல் வெதுப்ப மென்மலர்க்
கொம்பென அமளியிற் குழைந்து சாய்ந்தனள்"

என்று கவிகூறும் செய்யுட்கள் சீதையின் நிலையை விளக்குவதாகும்.

"இந்திர நீலமொத்திருண்ட குஞ்சியும்
சந்திரவதனமும், தாழ்ந்த கைகளும்

சுந்தர மணிவரைத் தோளுமேயல
முந்தி யென்னுயிரையம் முறுவல் உண்டதே ''

என்று இராமனது ஆக்கஞ்செப்பி மகிழ்கின்றாள் சீதை. இத்துடன் அமையாது, அவள் பார்க்கு மிடமெங்கும் இராமனது தோற்றமே காணப்படுகின்றது. தனது மாடத்தை விடுத்துக் கூடத்தைக்கடந்து, பொழிலிடத்திருக்கும் பொய்கையை யணுகும் பொழுதுங்கூட அங்குள தாமரையிலைகள் அண்ணலின் வண்ணத்தையும் கமலங்கள் அவனது கண்களையும் நினைப்பூட்டி இவளது உள்ளத்தை உருக்குவதாயின. இதை கவியரசர் கம்பர் பெருமான்.

" பெண்ணிவண் உற்றதென்றும் பெருமையால் அருமையான
வண்ணமும் இலைகளாலே காட்டலால் வாட்டந்தீர்ந்தேன்
தண்ணருங் கமலங்காள் என்தளிர் நிறம் உண்டகண்ணின்
உண்ணிறங்காட்டி என் உயிர்தர உலோவினீரோ ''

என்று சீதையின் கூற்றாகக் கூறுவாராயினர். சீதையின் நிலைதானிது வென்றால், ஆற்றல் சால் இராமனது நிலையும் இதையொத்தே இருக்கின்றது. பார்க்குமிட மெங்கும் சீதையின் தோற்றமே காணப்படுகின்றது. இதையே கம்பர்,

" * * * * கங்குலுந் திங்களுந்
தனியுந்தானு மத்தையலு மாயினான் ''

என்று கூறுகின்றார். இத்தகைய, கம்பர் கவித்திறனால் அமைந்த சான்றுகள், தொல்காப்பியரது களவின் இலக்கணத்திற்கு ஒப்பற்ற இலக்கியமாக அமைந்துகிடப்பது, நாம் கண்டு மகிழ்வதற் குரியதாகும்.

இனி களவு செய்தவனது தன்மையை உற்று நோக்குவாம். " அயர் உலகினுக்கு அறத்தின் ஆறெலாம் இழைத்தவன் '' இராமன்.

" விரிந்திடுதீவினை செய்த வெவ்விய தீவினையாலும்
அருங்கடையின் மறை யறைந்த அறஞ்செய்த அறத்தாலும் ''

பிறந்தவன் இராமன். இத்தகைய அறத்தின்வழி நின்ற ஆரியர் கோனும் இராமன், தான்கண்ட நங்கையைக் கண்ட அளவில் காதல் கொள்ளுதல் தகுமோ? என்று பலர் ஐயுறலாம். மிதிலைமா நகரில் அரசமாளிகையில் கண்ட நங்கை, பிறன் ஒருவனது மனைவியா யிருந்தால், இராமனது அறத்திற்கு அது பழுதாகாதோ? அந்நங்கையின் நிறையுடைமைக்குப் பழுதாகாதோ? ஆகும். ஆனால் இதே வண்ணம் இராமனது உளத்தில் எழாதிருக்கவில்லை. தன்னுடைய கண்கள் இதுவரை எத்தனையோ பெண்களைப் பார்த்திருந்தும் அவர்களில் ஒருவரிடமாவது செல்லாமல், இன்று, கண்களும், உள்ளமும் ஒருங்கே தான் கன்னிமாடத்துக்கண்ட நங்கையின்பால் செல்லக் காரணமென்னை யெனத் தன்னைத்தானே வினவுகின்றான்; வினவிய கேள்விக்கு விடையும் பெறுகின்றான். இதையே கம்பர்,

" எருநல்வழி யல்வழி யென்மனம்
ஆகுமோ இதற்காகிய காரணம்
பாகுபோன் மொழிப் பைந்தொடிக் கன்னியே
ஆகும் வேறிதற்கையுற வில்லையே

என்று இராமன் தனது தன்மையுணர்ந்து தன் உள்ள நிலையை உணர்ந்ததாக அமைத்திருக்கின்றார்.

இனி, இக்கள்வன் களவுசெய்த பொருள்கள்தான் யாவை? இக்கேள்விக்கு விடை நாம் சீதையின் வாயினின்றும் பெறுகின்றோம். சீதை, தன்னிடமிருந்த பெண்ணலன், நாண், உணர்வு என்ற மூன்று பொருள்களைக் களவாடிச் சென்றுவிட்டான் ஒரு கள்வன் என இரங்குகின்றாள்.

"பிறையெனும் நுதலவள் பெண்மை யென்படும்
நறைகமழ் அலங்கலான் நயனகோசரம்
மறைதலும் மனமெனும் மத்தயானையின்
நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போயதே"

என்று கவியரசர்கூறும் செய்யுளில், இவளது பெண்மையின் நிலையும், மன நிலையும் விளக்க முறுவதாகும். இனி இக்கள்வன் எவ்வழிவந்து இப்பொருள்களைக் கவர்ந்து சென்றான் என்பதை, தலையங்கமே விளக்கி விடுகின்றது சீதையும் தன் காதலனைக் கண்வழி நுழைந்த கள்வன் என்றே யழைக்கின்றாள். வள்ளுவர் பெருமான் கூறும்,

"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனுமில" என்ற குறளொப்ப
"எண்ணரு நலத்தினாள் இனையள்நின் றுழி
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றை யொன்று
உண்ணவும் நிலைபெறா து உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்"

என்ற நிலையில், கள்வன் எவ்வழி நுழைந்தான் என்பது பெறப்படுகின்றது. இக்கண்ணினால் குறிப்பறிதல் என்ற நிலை உண்மையாய் அனுபவித்த காதலர்க்கே தெரியும். இன்னும்,

"யானோக்குங் காலை நிலநோக்கும் நோக்காக்கால்
தானோக்கி மெல்லநகும்"

என்ற குறள், வள்ளுவர் பெருமான் எவ்வாறு மக்கள் உள்ளத்தை உள்ளவாறு உணர்ந்திருக்கின்றார் என்பதை விளக்கும். இதைத்தான் கவியரசர் கம்பர்பெருமான்.

"பருகிய நோக்கெனும் பாசத்தால் பிணித்து
ஒருவரை யொருவர்தம் உள்ளம்ஈர்த்தலால்
வரிசிலையண்ணலும், வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்கிதய மெய்தினர்"

என்று புவியரசனாகிய இராமனிடத்தும் அவன் காதற்கிழத்தியாம் சீதையிடத்தும் காட்டுகின்றார். இக்கருத்தை, இவர்கள் காலத்திற்கு பின்னெழுந்த பேராசிரியர்களெல்லாம் பொன்னேபோல் போற்றுவாராயினர். உதாரணமாக, புலவர்க்கு ஔடதமாகிய நைடதம் எழுதிய பேராசியரும், கொற்கையெனும் புவியரசருமான அதிவீரர்,

"உண்ணிறைவுடைய காமம் உருவெடுத் தென்னநின்ற
அன்னலும் அணங்கன்னாளும் அழகெனுமினிய தேறல்
எண்ணருங்காதல்கூர இனிதினில் மாறிமாறிக்
கண்ணினாற் பருகி யின்பக்களிப்பெனுங் கடலுள் ஆழ்ந்தார்"

என்று இக்கண்ணின் நோட்டத்தைப் போற்றுவாராயினர். கம்பரது கண்வழி நுழைந்த கள்வனிடத்துக் கண்ட, கண்ணினால் குறிப்பறிதல் என்ற தன்மை, நைடதத்தாரது செவி வழிநுழைந்த செல்வனிடமும் காண்கின்றோம். ஆதலால் காதலின்பப் பெருவெள்ளத்தில் திளைத்து செம்மாந்து

இருக்கும் காதலர்க்கு அவர்களது கண்களே அவர்களுக்கு எல்லாம். ஒருவரையொருவர் பார்ப்பதுவும் அதனாலேதான், ஒருவரிடம் ஒருவர் பேசுவதும் அதனாலேதான், ஒருவரது கருத்தை ஒருவர் உணர்வதுவும் அதனாலேதான், ஒருவரது உள்ளத்தில் மற்றவர் புகுவதும் அதனாலேதான். ஆதலால் தான் இக்கள்வர் பெருமகனும் சீதாபிராட்டியின் கண்வழி நுழைந்து, அவள் தன் நலன், நாண், நிறையென்ற பொருள் கவர்ந்தான் போலும்.

இவ்விடத்து கலித்தொகையிலுள்ள ஒரு செய்யுள் ஞாபகத்துக்கு வருகின்றது.

"சுடர்த்தொடீஇ! கேளாய்! தெருவில் நாம் ஆடும்
மணற்சிற்றில் காலிற்சிதையா அடைச்சிய
கோதை பரிந்து, வரிப்பந்து கொண்டோடி
நோதக்கசெய்யும் சிறுபட்டி, மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா, இல்லிரே
உண்ணும் நீர்வேட்டேன் எனவந்தாற்கு, அன்னை
அடர் பொற்சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்
உண்ணுநீர் ஊட்டிவாவென்றாள், எனயானும்
தன்னையறியாது சென்றேன் மற்றென்னை
வளைமுன்கைபற்றி நலியத் தெருமந்திட்டு
அன்னாய் இவனொருவன் செய்ததுகாண் என்றேனா
அன்னையலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணுநீர்விக்கினான் என்றேனா அன்னையுந்
தன்னைப்புறம்பழித்து நீவ மற்றென்னைக்
கடைக்கண்ணாற் கொள்வான்போல் நோக்கி
நகைக்கூட்டம் செய்தான் அக்கள்வன்மகன்

என்று காதலால் கட்டுண்ட தலைமகள், தன் தலைவனைப் பற்றித் தோழிக்கு நினைப்பூட்டுங் காலத்தும் கள்வன்மகன் என்றே திருப்பெயர் சூட்டுகின்றாள் களவு செய்வதும் களவு செய்யப்படுவதும் காதலன் காதலிகளுக்கு உகந்த செயலேயாகும். எல்லாம் வல்ல இறைவனிடம், அன்பெனும் பாசத்தால் பிணிப்புண்டவரும், தம்மை ஆட்கொண்ட இறைவனைக் கள்வன் என்றே அழைக்கின்றனர். மூவாண்டிற்பாலும் அருட்சத்தி வாய்க்கப்பெற்ற சம்பந்தப் பெருமானும், "என் உள்ளங் கவர்கள்வன்" என்றே பிரமபுரத்துப் பெம்மானை அழைப்பாராயினர். ஆதலான் கள்வன் என்ற பெயர் அன்பின் முதிர்ச்சியால் அன்பிற்குரியார்க்கு அன்புடைப் பெருமக்களால் இடுகின்ற ஓர் திருப்பெயரேயாம் என்பது பெற்றாம்.

கண்வழி நுழைந்த கள்வன் என்னும் சொற்றொடரை ஆராயப்புகுந்து ஏதேதோ சொல்லி எம் அறியாமையை விரித்துவிட்டேம் என அச்சம் எழுகின்றது எனினும், எடுத்த பொருளை முட்டின்றி முடிப்பதே, பணிசெய்வார் கடன் என்பது கருதி இன்னும் சில சொற்கள் கூறி அடங்குவதும், இவ்விடத்துத்தான் கம்பர் முதன்முதல் தனது முதனூலாசிரியராகிய வான்மீகியினின்றும் மாறுபட்டு, தான் செல்லவேண்டிய வழியே செல்கின்றனர். வான்மீகியினது சீதை, தனது தாதையாம் சனகன், அவனிடமிருந்த அரிய வில்லை வளைத்து ஒடித்த காரணமாக, தன்னை வில்லொடித்த வீரனுக்குப் பரிசாயளிப்ப, தந்தை தந்த தலைவனே தன் தலைவனுவன் என்று ஏற்றுக்கொள்கின்றாள். ஆனால் கம்பரது சீதையோ, வில்லொடித்த வீரன் இவன் என்றாவது அல்லது தந்தை தந்த தலைவன் என்பது கருதியாவது, இராமனை

மணஞ் செய்யக் கருதினளில்லை. இராமனைத் தன் கண்ணால் கண்டு, அவனது அழகெனும் இனியதேறலை அமிர்தமாயுண்டு, அதனால் தன் நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போயதை உணர்ந்து தன் தலைவனை அடைகின்றாள். கண்வழி நுழைந்த கள்வன் இவளைக் கன்னிமாடத்துத் தனியேவிடுத்து,முனிவர் பின் சென்ற சிலபோழ்தில், இவளது தோழியாம் நீலமாலை இவளிடத்து வந்து, முனிவருடன் வந்த மன்னவன் மைந்தன், வில்லிறுத்தான். அவனே உன்னை மணமாலை சூடுவன் என்று சொல்லிய காலத்து இவளது உள்ளம் பட்டபாட்டை யாரே அறிவர் கம்பரே அறிந்தார். தான் கன்னிமாடத்திருந்து கண்ட தலைவன்தானிவனோ. அன்றி வேறெவனோ என்று ஐயுற்று நீலமாலையிடம் பல கேள்விகள் கேட்டுப் பின்னர்,

"கோமுனியுடன் வருகொண்டல் என்றபின்
தாமரைக் கண்ணினன் என்றதன்மையால்
ஆமவனே கொல் என்றுஐயம் நீங்கினாள்"

இவ்வாறு அவ்வையம் நீங்கிய சீதையும், பின்னும் பலகாலும் அவ்வையம் தன்னை வருத்த அதனால்,

"சொல்லிய குறியின் அத்தோன்றலே அவன்
அல்லனேல் இறப்பன் என்று அகத்து உன்னி"

ஓர் தீர்மானத்திற்கு வருகின்றாள். நீலமாலையாம் தோழி சொல்லுகின்ற குறிகளால், வில்லொடித்த வீரன் என் நிறை கவர்ந்த கள்வனே யாகல்வேண்டும். ஒருக்கால் பிறிதொருவனாயிருப்பின், நான் அவனை வில்லொடித்த காரணத்தால் மட்டும், தலைவனாய் ஏற்றுக்கொண்டு அசுரமணத்தில் புகுவதை விட உயிர் துறந்து, "இன்னும் ஒரு பிறப்பிலாவலும், தன்னந்தனியே யிருந்து தவமாற்றி" தான் மனத்துட்கொண்ட காதலனது "பொன்னகல முன்னுருகப்புல்லுதலே" மேலாகும் என்று கூறும் இவ்வழகிய கருத்துத் தமிழகத்து மாதரின் வீரத்தையும் தீரத்தையும் ஒருங்கே காட்டுவதாகும்.

இம்மட்டோ! இந்தத் தீர்மானங்களெல்லாம் செய்துகொண்டு, தான் கண்டு காதலித்த கணவனே தன்னை மணமாலை சூட்டப்போகின்றான் என்று கருதி தோழியர் புடைசூழ வந்த நங்கை, மணவறையில், மணப்பலகையில் மணமகனுடன் அமர்ந்திருந்த காலத்துங்கூட தன் பக்கலில் இருப்பவன், தன் கண்ணால் கண்டு, தன் காதலால் கட்டுண்ட அத்தலைவன் தானோ என்று அறிய தன் "கைவளை திருத்துபு கடைக்கணிலுணர்ந்தாள்" என்று கம்பர் கூறுகின்றார்.

ஒரே விடத்து இவ்வில்லொடித்த வீரன் தன் கண்ணுழைந்த கள்வனாயிராவின் அந்த மணவறையில்கூட தான் முன் தீர்மானித்ததுபோல் நடக்கவே சீதை தயாராயிருந்தாள் என்பதைக் காட்டவே, கவியரசர் இச் சித்திரந் தீட்டுகின்றார். இக்கருத்துக்களெல்லாம் கம்பரது கவிதா விலாசத்தில் எழுதுவதற்குக் காரணமென்னையெனில் கூறுதும். தமிழகத்து நிறையுடைய மாதர், "பிறர் மனம்புகுதலே தம் நிறையுடைமைக்கு இழுக்கு" என்று கொள்ளும் பெருஞ் செல்வர் என்பதை உணர்ந்த தமிழகத்துத் தனிப் பெரும்புலவராம் கம்பர் பெருமான், ஆரிய சீதையைத் தமிழ்ச் சீதையாய்க் காட்டாதிருப்பாரே யானால் அவரது இராமகாதை இன்றிருக்கு நிலையில் நின்றிரா என்பதும், அவர் இன்று தமிழகத்துக் கவி உலகில் பெற்றிருக்கும் இடம் பெற்றிரார் என்பதும் எனது தாழ்ந்த கருத்தாகும் என்று கூறி என் பணி முடிக்கின்றேன்—திருவருள் முன்னிற்க—சுபம்.

ஆசிரியர் சீடனுக்கு

# உபதேசிக்கும் முறைமை.

தமிழ்ப்பண்டிதர்-ஆ. கமலநாத முதலியார்.

(50-ம் பக்கம் தொடர்ச்சி.)

அந்த நினைவே தானாகிற அறிவினாலே ஆசை வைத்ததே பரமபக்தி. அந்த அறிவுதானே சச்சிதானந்த சொரூபமென்று நினைத்துச் சிந்தனை பண்ணுகிறதே ஞானமென வறிக.

இந்த ஞானம் நிச்சயஞானம், சமாதிஞானம், சகசஞானம் என மூன்று வகைப்படும். அவற்றுள் நிச்சயஞானமானது சுருதியின் துணிபினாலே உலகம் கானற்சலமென்று நிச்சயித்தல்.

சமாதி ஞானமானது. சமாதியின்கண்ணே சுருதியின் நினைவினாலே உலகம் கானற்சலமென்று நிச்சயித்தபடியே இருக்கப்பார்த்தல்.

இந்த நிச்சயஞானமும் சமாதி ஞானமும் ஆசையற்றவர்கள் மனதில் என்ஞான்றும் குடிகொண்டிருக்கும். ஆசையுடையவர்கள் மனதில் என்ஞான்றும் கலங்கிக்கொண்டிருக்கும்.

சகச ஞானமானது, விருப்பு வெறுப்பு அற்றவர்களுடைய உள்ளத்தில் நீங்காமல் நிலைபெற்றிருக்கும். இச்சகசஞான நிட்டையுடையவர்கள் தமது முயற்சி ஒரு சிறிதுமில்லாமல் திருவருட்பிரகாசத்தினால், புவனமும் போகமும் தமது சரீரமும் தகுந்த காரணமுமாகிய எப்பொருள்களும் அவ்வருண்மயமாகி இருதயத்திலுதயமான அருட்சொரூப மறையாமலும் மறைந்துபோன கிரியைகள் திரும்பவும் உதிக்காமலும் மனோவாக்குக் காயப் பிரயாசமின்றி லபித்து இருந்தபடியே யிருக்கும் நிலையையுடையது. அன்றியும் காண்பவெல்லாம் சொப்பனம்போலுமென்றே துணிந்தவன் ஞானியாவான் என்பவற்றாலுங் காண்க. இதனையே முருகப்பெருமான் "பரனது முகத்திற் குலகுபொய் படிற்றுளக்கினுக்கு அது மெய்ம்மை, திரமுறு சாட்சிதானெனச் சீவன் தெரிந்திடில் பரன்மன மிவற்காம், விரவிய சகமப்போது பொய்யாகி விளங்குறு"மென்று சிதம்பரசுவாமிகளுக்குத் திருவாய் மலர்ந்தருளினர்.

சூரியனுடைய கிரணமே கானற் சலம்போலச் சல திருஷ்டியாய்ப் பார்த்தால் தோன்றுகிறது. சூரியனுடைய கிரண திருஷ்டியாய்ப்பார்த்தால் சூரியகிரணமே தோன்றுகிறது. ஆகையினாலே கானற்சலம் பொய்ப்படுவது.

தானாகிற சச்சிதானந்த சொரூபத்தை மறந்த வாசனா நினைவே நாமரூப ஆகாரம்போலத் தோன்றுகிறது. அதுவே அஞ்ஞான திருஷ்டி. தானாகிற சச்சிதானந்த சொரூப அறிவை நினைத்துச் சிந்தனை பண்ணின அறிவே அறிவு மாத்திரையா யிருக்கிறது. இதுவே ஞானதிருஷ்டி. ஆகையாலே நாமரூப ஆகாரம் பொய். நிஷ்களரூபமாகிறது தானாகிற அறிவே. அன்றியும் சச்சிதானந்த சொரூபமான பழனியாண்டவனும் அவனே.

நிஷ்கள சொரூபமாவது தானே சச்சிதானந்த சொரூபமாயிருக்கிறது. சத்து சித்து ஆனந்தமானது அறிவு.

வினா:—அநித்தியம், சடம், துக்கரூபமாவது எப்படியென்றால்?

விடை:—அநித்தியத்திற்குத் தான் நித்தியமா யிருக்கிறபடியினாலே சத்து. சடத்துக்குத் தான் அறிவாய் விளங்குகிறபடியினாலே சித்து. துக்கரூபத்திற்குத் தான் அறிவானந்தமயமானபடியினாலே ஆனந்தமென்றறிக. தானாகிற சச்சிதானந்த சொரூபநினைவை மறந்து தானே தேகாகாரமாய்ப் பஞ்சவிந்திரிய விடயங்களைப் புசிக்கிற வாசனா நினைவே உயிர். தானே சச்சிதானந்த சொரூபமென்று நினைத்துச் சிந்தனைபண்ணுகிறதே சொரூப நினைவு.

வினா:—ஆனந்தபிரக்ஞை, சொரூபபிரக்ஞை நிட்டாபிரக்ஞை எப்படியென்றால்?

விடை:—தான் தானே கேவல சிற்சிவானந்த சொரூபநினைவு தானே ஆனந்த பிரக்ஞை. தான் தானே கேவல சிற்சிவசொரூபமான நினைவு தானே சொரூபபிரக்ஞை. நாமரூபமாகத் தோன்றுகிற சகல பிரபஞ்சமும் தானே பரிபூரணமான சச்சிதானந்த சொப்பிரகாச நினைவு தானே நிட்டா சொரூபம்.

வினா:—சிவம், ஞானசக்தி, கிரியாசத்தி யாது?

விடை:—சிவத்தினுடைய இச்சை மாயையிடத்திலே கலந்த இடம் ஞானசக்தி. இந்த ஞானசத்தித் தனு கரண புவன போகத்துடனே கலந்து மனம் புத்தி அகங்காரம் சித்தமாய்க்கலந்து பிரபஞ்ச விவகாரங்களை யறிய விவகாரங்களைப் பிரித்துச்சொல்ல சுகதுக்க போகங்களைப் புசிக்க இப்படி காரணமே தானாகநின்ற சத்திக் கிரியாசத்தியென்று பெயர். தேகம்-சடம். தானல்லவென்று நீங்கின அறிவுக்குக் கிரியாசத்தி நீக்கமென்றறிகிற சாட்சிரூபமான ஞானசத்தியாயிற்று. அந்த ஞானசக்தியாகிற அறிவுதான் சிவமென்றறிந்து தன்னைத்தான் சிந்தித்துச் சிவோகம் பாவித்து நின்றவிடம் ஞானசக்தி. இந்த ஞானசத்தி சிந்தித்தவிடத்தில் ஆனந்தந்தோன்ற அந்த ஆனந்த வடிவுதானென்றறிந்தது தான் சிவமென்றறிதல் சிவம்.

வினா:—மலம், மாயை, சிவம் என்பது யாது?

விடை:—மலமேலீட்டினால் சிவானந்தத்தை மறந்து தேகம் தானாய் விடயானந்தமே சுகமாய்நின்ற அறிவுக்கு உயிர், அவித்தை, அஞ்ஞானம்,

கிரியாசத்தி, திரோதானமென்று பெயர். கிரியாசத்தி விவேக அறிவினாலே தேகத்தைத் தானல்லவென்று நீக்கி ஞானசக்தியாகிய பரிபூரண அறிவாய்த் தோன்றித் தான் சிவமென்றறியாமல் சிவனைத்தேடி மயங்கி நிற்கிற இடம் சுத்தமாயை. இந்த ஞானசக்தி விவேக அறிவினாலே மயக்கம் நீங்கிச் சிவ அறிவாய் சிவானந்தவடிவாய் நின்ற அறிவுக்குச் சிவமென்று பெயர். சடம் சஞ்சல நிர்ச்சலமென்னும் மூன்றும் சடத்தோடேகூடிச் சஞ்சலப்பட்டது மறிவே. சிவத்தோடேகூடி ஆனந்தமாய் நிர்ச்சலமாய் நின்றதும் அறிவென்றறிக.

தன்னுடைய விஷயத்தைச் சடத்தோடேகூடிப் புசித்த அறிவுக்கு உயிரென்று பெயர். தன்னுடைய சிவானந்தத்தைச் சிவத்தோடேகூடிப் புசித்த அறிவுக்குச் சிவமென்று பெயர்.

நிர்மலமாயிருக்கிற சிவானந்த அறிவுதானே தூலசூக்குமமான நாமரூபமாகிய பிரபஞ்சத்தைக் கற்பித்தது.

வினா:—உள்ளும் புறம்பும் தான் தானே பிரகாசித்து விளங்குவது-உள்ளே எப்படியென்றால்?

விடை:—தன்னுடைய சந்நிதானமான சேதனசத்தியினாலே மனம் முதலாகிய சகல கரணங்களையும் தொழில்படுத்தி அறிவினாலே அறிந்து சாட்சியாய் நிற்கிறது.

சாட்சியாய் நிற்கிற அறிவு தானே தன்னுடைய இச்சையினாலே உண்டான பிரபஞ்சத்தினாலே ஆசைவைத்துத் தன்னுடைய சிவசொரூபத்தை மறந்ததே மாயை. மாயையாய் நின்ற அறிவு தானே தன்னுடைய நினைவைத் தானே சர்வகாலம் விஷயநினைவாய் நினைக்கிறபடியினாலே அநித்தியாமலமான உயிரென்று பெயர். இந்த உயிரென்று பெயராயிருந்த உயிரான அறிவு உடல் தானாய் யானெனதென்று தொழில்படுகிறது. ஆங்காரம். சங்கற்பம் விகற்பம் பண்ணுகிறது. மனது, அதை நிச்சயிக்கிறது. புத்தி சிந்திக்கிறது. சித்தம் அந்த வடிவாய் உயிரும் உடலும் தானாய்நின்ற அறிவுக்குச் சாத்திரம் ஆசாரியர் உபதேசத்தினாலே ஜடசித்து புரியில் விவேகம் வந்தது. அறிந்து புரிந்து தானே சித்து வடிவேவென்று சிந்தித்துச் சாட்சியாய் நிற்கிற அறிவு தானே சிவோகம் பாவித்துச் சிவானந்தநினைவாய் நிற்கிறதே சிவானந்தம்.

வினா:—வெளியிலே எப்படியென்றால்?

## ஞானவாசிட்டம்.

விடை:—கிஞ்சிலாகி விரிந்து சகத்திரளாய்க் கிளைத்த விவையெல்லாம்
விஞ்சுபிரமமே யறிவுபிரம மேதினிப்பிரமம்
பஞ்சபூதம் பிரமமாம் நமதுபகை பிரமம்
தஞ்சநட்புக் கிளைபிரமம் சங்கராதி நிச்சயமே.

என்பதனை வுணர்க.

இந்தப்படி நாமரூபமாய்க் காணப்படுகிற சகல பிரபஞ்சத்தினாலே சத்து சித்து ஆனந்தமாய் விளங்குகிறதே அனுபவம். உள்ளே விவேக போதம். வெளியே அனுபவ விவேக பிரக்ஞை. என்கிற பூமிக்குச் சற்குருவே இராஜா அவரைப்பார்த்துச் சீவன் கேட்கிறது.

வினா:—உயிர் சொரூபமானது, சிற்சிவானந்த சொரூபத்திற்குப் பின்னமோ? அபின்னமோ?

**விடை:**—எப்போதும் அனாதிசித்தம் பின்னமெனச் சொன்னால் யாதொரு காலத்திலேயும் சிவசொரூபமே யாகிறதில்லை. எப்போதும் ஏகமாயிருக்கிற சிற்சிவானந்த சொரூபமே உயிரென்று சொன்னால் சடசித்து விவேகத்தினாலே உயிர் சிவமாயிற்றென்று சொல்லுகிறது பொய்.

**வினா:**—ஆசையினாலே உயிர் எப்படிப்பட்டது? பின்னமாயிருக்கிற உயிர் எப்படிப்பட்டது? அதை அடையும் மார்க்கம் எவ்வாறு? என்று சீடன் கேட்டான்.

அதற்கு ஆசிரியர்.

"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன்
மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்
உறவு கோனட்டுணர்வு கயிற்றினால்
முறுகவாங்கிக் கடைய முன்னிற்குமே"

என்றபடி கேவலானந்த சின்மாத்திர பரமசிவமான சற்குருவானவர் தன்னுடைய சிவானுபவமே பிரகடனமாகச் சொல்லுகிறார். நிர்விகாரமாய் நித்திய நிரதிசயானந்தகேவல சின்மாத்திர சொரூபமான சிவன் அறிவிக்கிறது. அறிகிறது மன்றியிலே தானேதானாயிருக்கிற ஆனந்தப் பிரக்ஞையானது. தன்னுடைய நிஜானந்த அதிசய சுத்தினாலே தானே சத்துசித்தானந்த சொரூபமாய்ப் பரிபூரணமான சொரூப அறிவாய் விளங்குகிறதே சொரூபப் பிரக்ஞை. இந்தப் பரிபூரணமாகிற சிவசொரூப அறிவுதானே நிர்விகாரமாய் ஏகமாய்த் தன்னிடத்திலே அனந்தானந்த விசித்திர ரூபத்தைக் கற்பித்துத் தனது சொரூபானந்தத்தை விசேடமாய் அனுபவித்து விளையாடவேணுமென்று சுயாதீனமாய் ஞான இச்சா கிரியா சத்தியாகிற நினைவு நினைத்ததே சுத்தமாயா வறிவு.

## ஜீவிய சந்தாதாரர்.

நம் போதினியின் பொதுநல ஊழியத்தைக் கருதி 15-வது வருட முதல் F. 205 சந்தாதாரர் ம-௱-௱-ஸ்ரீ, ரும-சின்னையா பிள்ளை, ரம்போவ் (எப். எம். எஸ்.) ஜீவிய சந்தாதாரர்களி லொருவராகச் சேர்ந்து ஆதரித்து வருவது நமக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளிக்கிறது. இன்னும் அநேகர் அவரைப்போல் ஆனந்தபோதினியின் நலங்கருதி முன் வருவார்களாக. அன்னார்க்கு எப்பொழுதும் இறைவனருள் பாலிப்பாராக.

பத்திராதிபர்.

# ஆனந்த சந்திரோதயம்

**S. V. V.**

"அசட்டுத்த ஐங்கலக்காமம்" என்று சாதாரணமான ஓர் பழமொழி மக்களிடையில் வழங்குவதை நாம் கேட்டிருப்போம். இதனால் காமம் உண்டாவதற்குரிய பல காரணங்களில் அசட்டுத்தனமும் ஒன்று என்பது தெளிவாய் ஏற்படுகிறது. மனதிற்கும் தேகத்திற்கும் நல்ல முயற்சியும் உழைப்பும் இல்லாவிட்டால் அவை மதமடைந்து தீய காரியங்களில் தலை யிட்டுக்கொள்ளத் துணிகின்றன. அதிலும் 'ஓடுகிற பாம்பை மிதிக்கின்ற வயது' என்று சொல்வதுபோன்ற யௌவனமும், தேகபலமும், அயோக்யர்களுடைய உறவும் உண்டாகிவிடுமானால் காமமென்னும் விஷம் உள்ளங்கால் வழியாக தலைக்கேறி விடுகிறது. இந்த நிலையில்தான் "காமத்திற்குக் கண்ணில்லை" என்று சொல்லுவதும். இந்த யௌவனத்தில் துஷ்கிருத்யங்களில் ஒருவன் பிரவேசிக்கத் தொடங்கி விடுவானானால் அவன் ஆயுள் முழுதும் அவை அவனை விட்டு நீங்கா. இக்காலத்தில்தான் மாதா பிதா குரு ஆகிய மூவரும் ஒருவனுடைய நடவடிக்கைகளை நன்கு கவனித்து அவனை நல்வழிப் படுத்த வேண்டும். இங்ஙனம் எவர் தம் பிள்ளைகளைக் காப்பாற்றுகின்றார்களோ அவர்கள்தான் கண்கண்ட தெய்வமாவர். அவ்விளமைப் பருவத்தில் கல்வி கற்பதிலேயே அதிக ஊக்கமுடையவர்களா யிருக்கும்படிப் பெற்றோரும் ஆசானும் அவனைக் கட்டுப்படுத்தி அவனுடைய ஒழுக்கத்தில் கண்ணுங் கருத்துமா யிருக்கவேண்டும். கூடியவரையில் நல்ல யௌவனத்தை யடைந்த தமது பிள்ளைகளைக் கல்வியி னிமித்தம் வெளியூர்களில் தனியே இருக்க விடாமல் இருப்பது பெற்றோர் கடன். முந்நாளில் மாணவர்கள் குருகுல வாஸம் செய்தார்கள். பிள்ளைகளை ஆசானிடம் ஒப்புவித்துவிட்ட பிறகு அவர்களுக்கு எவ்விதக் கவலையு மில்லாதிருந்தது. அக்கால மாணவர்களின் சுவாதீனமான குருகுல வாழ்வு மனதிற்கு அளித்த உல்லாசத்திற்கும் உற்சாகத்திற்கும் தற்கால மாணவர்கள் பெரிய நகரங்களில் கல்வியி னிமித்தம் வந்து அடையும் உற்சாகத்திற்கும் பேதம் உண்டு. சத்யத்திற்கும், ஒழுக்கக் குறைவிற்கும், துஷ்கிருத்தியங்களில் நுழைவதற்கும், முற்கால மாணவர்கள் பெரிதும் அஞ்சினர். அக்கால கல்வி, கற்பிக்கும் ஆசான் பயிலும் மாணவர் ஆகியவற்றின் நிலைக்கும் தற்கால வியாபி விருத்திக்கும் உள்ள ஏற்றத் தாழ்வு இவ்வள வல்லவென்று. ஆதலில் இளமையில் ஊழும் பரிசுத்த இரத்தமானது அசட்டுத்தனமான காரியங்களில் விநியோகம் செய்யப்படாமல் நன்னெறியின் நின்று நிலவத் தத்தம் புத்திரர்களைக் காப்பாற்ற வேண்டுவது பெற்றோரின் கடமையாகும். இல்லையேல் ஐங்கலக்காமம் ஆகிய ஆழ்ந்த கடலின் நடுவில் அகப்பட்டுத் திசை தெரியாது தவிக்கும் கலத்திற்கு நிகராகி

யுழல்வர். அதனால் இம்மை யின்பங்கள் நசித்துப்போம். இங்ஙனம் நன்னெறியின்கண் நிற்பதே 'பரலோக சாதனம்' என்று பெரியோர் கூறுவர்.

***

"சேஷ்டையின்றிப் பிரதிஷ்டை யில்லை." சிலர் பெரியோர்களை நிந்திப்பதால் தமக்குப் பெருமை யுண்டாகுமென்று கருதுகின்றனர். இது வீண் முயற்சியே யாகும். பெரியோர்களைத் தாழ்த்திப் பேசுவதால் விளைவதெல்லாம் அபகீர்த்தியே யாகும். அறிஞர்கள் புல்லறிவுடையோர் தம்மை நிந்தித்துப் பேசும்போது பொறுமையுடன் இருந்துவிடுகிறார்கள். ஆகவே நிந்தனை செய்கின்றவர்களின் வாய்க்குச் சேதமேயன்றி வேறில்லை. அவர்களை நிந்தித்து எழுதுகின்ற பேனாவுக்கு நஷ்டம்; மைக்கு வீண் செலவு; காகிதத்திற்கு வீண் கருப்பு; அறிவுக்கு அனர்த்தம்; அகத்திற்கு வியர்த்தம். பெரியோரை நிந்திக்கும் புன்மையரைக் கண்டால் நாலுபேர் இகழ்ந்து காறித் துப்புவார்கள்; அதனால் அவமானம். மேலும் பெரியோரை நிந்தித்து வாழ்ந்தவர் உலகில் இதுவரையில் எவரு மில்லை. "வைதான் வாழும் எனில் வியத்தக்கான்" என்பர் நாலடியாரில். அதாவது "பெரியோர்களை நிந்தித்தவன் வாழ்கிறதில்லை. அப்படி வாழ்வானாயின் அது அதிசயிக்கத் தக்கதாகும்" என்பதே. தெய்வ நிந்தனை, குரு நிந்தனை, பெரியோர் நிந்தனை செய்பவர் நிந்தனையிலேயே தமது மனம் வாக்குக் காயமாகிய மூன்றும் ஊறி ஞானத்தின் வளர்ச்சித் தடைப்பட்டு, மூர்க்கத் தன்மை மிக்குற்றுப் பெரியார் வெறுப்புக்கு ஆளாகி, உண்மையான இன்பமற்று ஏங்குவர். அறிஞர்கள் "சந்திரனைப் பார்த்து நாய் குரைத்த போதிலென்ன?—தாழ்ச்சி தானே" என்று மதியாது, அன்னோர் தலைவாயில் மிதியாது புறக்கணிப்பர். ஆதலால், சேஷ்டையின்றிப் பிரதிஷ்டையில்லை யென்பது அறிவிலிகட்கு ஒவ்வாது; நிந்தனைக்கு அடுக்காது.

***

"நாய் குரைத்து நத்தம் பாழாகுமா?" என்ற ஓர் அற்புத வசனம் உண்டு. சூரியனைப் பார்த்து நாய் குரைத்தால் சூரியனுக்கு நஷ்டமில்லை. குரைத்துக் குரைத்து நாய்க்குப் பைத்தியம் பிடித்துவிடும். ஊரிலுள்ளவர்கள் அடித்துக் கொன்றுவிடுவார்கள். தெருவில் மோட்டார் வண்டி சப்தமிட்டுக் கொண்டு போகும் பொழுது நாய்கள் குரைத்துக்கொண்டே முன் சென்று மறிப்பதுண்டு. சில சமயம் குரைக்கின்ற வெறியில் சக்கரங்களில் அகப்பட்டு இறந்தும்போவது சகஜம். அதுபோலப் பிறரைத் தூற்றுவதையே தமது தொழிலாகக் கொண்ட பேதையர் நாய்களைப்போல் குரைத்து, நரிகளைப்போல், ஒரு பயனுமின்றி, விரதம் சுகம் ஆகிய இரண்டில் ஒன்றையேனும் கருதாமல் ஊளை யிட்டு, தேகத்தில் நல்ல பலமும் கையில் தனமும் இருக்கும் போதே அறஞ் செய்யாது வயோதிகத்தில் ஒடுங்கிப்போய் நரகக் குழியில் வீழ்கின்றனர். கோடி நாய்கள் ஒன்றுகூடிக் குரைத்தாலும் சூரியனுடைய பிரகாசத்திற்குக் குறைவேற்படுகிறதில்லை. நிஷ்களங்க பக்தர்களை எத்தனை

ஆயிரம் பேர் சேர்ந்து தூற்றினும் அவர்கள் பக்தியில் மாறுகிறதில்லை. எத்துணைத் துன்பப்படுத்தினாலும் சகிப்புத் தன்மை அவர்களை விட்டு நீங்குகிறதில்லை. எத்துணை நவீன இயந்திரங்களை வைத்து இறைத்தாலும் சமுத்திரம் வற்றாது. எந்தப் பகவான் சாதுக்களையும் பிற மனிதர்களையும் படைத்தாரோ அதே பகவான்தான், உலகத்தில் தேள், நண்டுவாய்க்காலி, பாம்பு முதலிய விஷ ஜந்துக்களையும் பிறப்பித்திருக்கின்றார். அதுபோல, துஷ்டர்களும் உலகில் என்றும் இருந்தே தீருவர். உலகச் சரித்திரத்தை ஊன்றிப் பார்ப்போமானால் ஆதிகாலந் தொட்டு இன்றளவும் எல்லா நாடுகளிலும் பெரியோர்களுக்கு விரோதமாய்க் கிளம்பினவர்கள் அநேகர் காணப்படுகின்றனர். "ஒரு கன்னத்தில் அறைந்தால், மற்றொரு கன்னத்தைத் திருப்பிக் காட்டு" என்று எந்த மகானுபாவர் பொறுமையை உணர்த்தி ஹிதோபதேசம் செய்தாரோ, அவரே சிலுவையில் உயிரோடு கொல்லப்பட்டார். "ந பரதாரம் கச்சேத்" என்ற மகா வாக்கியப்படி பிறன்மனை விழைதல் பஞ்சமா பாதகங்களில் ஒன்றென்பதை உணர்ந்தும், சுபாவ குணத்தாலும் காம மயக்கத்தாலும் பிரதாப லங்கேஸ்வரனான ராவணன் சீதையைக் கவர்ந்து திரிலோகாதிபதி என்ற ஸ்தானத்திலிருந்து கணத்தில் இறக்கப்பட்டான். துஷ்ட சுபாவமுடையவர்களுக்கு நல்லோர் ஹிதோபதேசம் செய்தாலும் அது அவர்கள் காதுகளில் ஏறுகிறதில்லை. "புல்லோர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்று" என்று நன்றே சொன்னார் கம்பரும். "மந்திர மற்றார் உற்றது உரைத்தாய் மதியற்றாய்" என்று விபீஷணன் பலவாறு இடித்துக் கூறியும் இராவணன் செவி சாய்க்கவில்லை. இவ்விதக் கெட்ட சுபாவமுடையவர்களை எப்பொழுதும் திருத்தி நல்வழிப்படுத்துகிறதென்பது சாத்தியமில்லை. அவர்களை விட்டு நீங்குவதே நல்ல நெறி என்பர் பெரியோர். "திருந்தார்" என்றே பெரியோர்கள் இத்தகையாரைப் பெயரிட்டு அழைப்பது வழக்கம். தாரகாசுரன் புத்திரர்களான, தாரகாக்ஷன், வித்யுந்மாலி, கமலாக்ஷன் என்னும் மூவருக்கும் 'திருந்தார்' என்று பெயர். "திருந்தார் புரமெரித்தார்" என்பர் பெரியோர். எட்டிக்காயை எவ்வளவு சத்பதார்த்தம் சேர்த்துப் பக்குவப்படுத்தினாலும் நல்ல சுவையுடையதாகிற தில்லை. ஆகவே, கெட்டவர்களை அவர்கள் போக்கில் விட்டுவிடுவதைத்தவிர வேறு நிவர்த்தியில்லை.

***

"என் செய்வான் தோன்றினேனே" என்று பக்தர்கள் இரங்குவார்கள். ஒரு சமயம் பக்தி மேலீட்டால் தன்னைக் காத்தருளுமாறு கடல் வண்ணனை—கண்ணனை ஆழ்வார் அழைக்க, அப்பொழுது எம்பெருமான் "த்ரைவர்ணிகாதிகாரமான உபாயங்களில் உமக்கு அந்வயமில்லை என்று நீர் முறையிடுகின்றீர்—சரி! ஸர்வாதிகாரமான அர்ச்சனம், ஸ்தோத்திரம் முதலியவற்றில் உமக்கு ஏதாவது அந்வய முண்டா?" என்று வினவ,

ஆழ்வார் "ஐயோ! அதிலும் அடியேனுக்குப் பிடிப்பில்லையே; என் செய்வேன்" என்று கையை விரித்தார். மேலும் "கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார் முளரியும் ஆம்பலும் முன் கண்டக்கால், புள்ளாயோ ரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று, உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே" என்றபடி கண்ணிற்கண்ட பூக்களைக் கொணர்ந்து கொணர்ந்து பெருமான் திருவடிகளிலே ஸமர்ப்பிக்க வேண்டியது பிராப்தமாயிருக்க, அது செய்கின்றேனில்லை; இவ்வளவு கஷ்டமும் வேண்டா; வாய்க்குவந்த நான்கு சொற்களைச்சொல்லி ஸ்தோத்திரமாவது செய்யலாமே; அதுவும் செய்யப் பெற்றிலேன்; அவ்வளவு சிரமமும் வேண்டாம்; நெஞ்சிலேயாவது சிறிது ஸ்நேகம் கொண்டிருக்கலாமன்றே? அதுவும் இல்லை. இப்படி ஒருவிதத்திலும் எம்பெருமான் விஷயத்தில் நான் மன நாட்டம் அடையப் பெறாதவனான பின்பு, ஆட்டின் கழுத்தில் தொங்குகின்ற முலைக்கும் எனக்கும் என்ன வித்யாஸம்? என்னுடைய பிறவி வீண்! வீண்!!வீண்!!!" என்று பின்னும் இரங்குகின்றார். இதிலிருந்து இறைவனிடத்து பக்தி செலுத்தி, தொண்டு செய்யாத பிறவி பயனற்றது. வாலறிவன் நற்றாள் கட்கு அன்புபூண் டொழுகாத ஜன்மம் வியர்த்தம்; சம்சார சாகரத்திலே மூழ்கிக் கடைதேற வழி தெரியாது தபித்துக்கொண் டிருத்தலே பத்தியற்றவர்களின் கதி. எங்ஙனமாயினும் இறைவனிடத்துக் கிஞ்சித் பக்தி செலுத்தி "தொல்லையிரும் பிறவி சூழும் தளை"யை நீக்க வேண்டுமென்றே அடியார்கள் முறையிடுகின்றார். ஜீவன் முக்தர்களான அவர்கள் இங்ஙனம் பிரலாபிப்பதன் காரண மென்ன? அது அலா நெறிக்கே திரியும் மக்களைத் தட்டி யெழுப்பி நல்லறிவு கொளுத்த இயல்பாக உண்டான அருளினால் எழுந்த பிரலாபமேயன்றி வேறல்ல. மன பரிபக்குவ மடைந்து பகவானுடைய கிருபைக்கு அவர்கள் பாத்திரரானது போதாமல் அந்த முக்தி சாதன வழியை மாந்தர்க்குப் புகட்டவேண்டு மென்னும் கருணையால்

> போதெல்லாம் போது கொண்டுன் பொன்னடி புனையமாட்டேன்
> தீதிலா மொழிகள் கொண்டுன் திருக்குணம் செப்பமாட்டேன்
> காதலால் நெஞ்சமன்பு கசிந்திலேனது தன்னாலே
> ஏதிலே னரங்கர்க்கெல்லே என்செய்வான் தோன்றினேனே.

என்று, உலக சுபாவமான குணத்தைத் தமக்கிருப்பது போலக்கொண்டு துதிக்கின்றார்கள். இவ்வித பாசுரங்களால் பயனடைய வேண்டியவர்கள் நாம்தான்.

***

"வேண்டுபோ தழுவாள் சிரிப்பாள் விலைமாது." ஆடவர்களின் மனதை வசப்படுத்த வேண்டி பெண்கள் சமயத்திற்குத் தக்கபடி அழுவதும் சிரிப்பதும் ஸ்வபாவம். புத்திசாலியா யிருப்பவன் பெண்கள் அழுவதைக்கண்டு பரிதாபப்படுவதும், சிரிப்பதைக்கண்டு மகிழ்வதும் கூடாது.

தங்கள் இஷ்டப் பூர்த்திக்காகத் திடீரென்று கண்களில் கலநீர் ததும்ப விடுவார்கள். விலைமாதர்கள் தாங்கள் படும் நோயைக் கருதாமல் பணத்தில் மட்டும் கருத்துடையவர்களாய் வாயிற்படியில் நின்றுகொண்டு வழியே செல்லுகின்ற யௌவனர்களைக்கண்டு தாம்பூலம் தரித்தவாயுடன் சிரித்து மெல்ல அவர்களை இழுக்கப் பார்ப்பாள்.

"பணத்திற்கு ஆசைப்பட்டு பெண் கொள்பவன் பித்தன்." குணத்தைக் கருதியே யன்றிப் பணத்தை மட்டும் கருதி பிசாசுகளை விவாகம் செய்து கொள்வது ஒருவனுடைய வாழ்வையே குலைத்துவிடும். மானவெட்கங்களுக்கு அஞ்சி பதிபக்தியும் அடக்கமும் உள்ள ஸ்திரீயை ஒருவன் அடைந்துவிடுவானாகில் அதைவிட அவன் பெறுதற்குரிய நன்மைகள் வேறில்லை. பொருளை மட்டும் கருதி அடங்காப் பிடாரிகளை வேட்கின்றவர்கள் அவள் ஆடுகின்ற ஆட்டங்களுக்கெல்லாம் அடங்கி, தனது பெருமையும் செல்வாக்கும் அழிந்து எண்சாண் உடம்பும் ஒரு சாணாகக் குன்றிப்போவான்.

"பெண்களிருப்பிடமும் பேய்களிருப்பிடமும் ஒன்று" என்று துன்பப் பட்ட குடும்பி மனம் வருந்திச் சொல்லுகிறார்கள். பேய் பிடித்தவன் தன் விருப்பப்படி எதையும் செய்ய முடியாமல் பேயின் இஷ்டப்படி ஆடுகிறான்; தனக்குத்தானே பேசிக் கொள்ளுகின்றான்; சிரிக்கின்றான்; ஆடுகிறான் பாடுகிறான். அதுபோல நற்குண மற்ற பெண்டிரிடம் சிக்கிய ஆடவன், தன் சுய விருப்பை அடக்கிக்கொண்டு மனைவியின் இஷ்டப்படி ஆடுகிறான்; முன் பின் யோசியாமல் பொருளைச் செலவிடுகின்றான்; சிற்றின்ப ஆனந்தத்தால் பல்லைக்காட்டிச் சிரிக்கின்றான்; மான மிழந்து மதிகெட்டுப் போகின்றான்—மதம் பிடித்து அலைகின்றான். ஆனால், நமது செயலில் இவை யாவும் அகப்பட்டிருக்கின்றனவா? பலவிதங்களிலும் ஆராய்ந்து நற்குணப் பெண்டிரெனக் கண்டு காதலித்து மணந்த ஸ்திரீயே பிறகு பேய்போல ஆகி விடுகின்றாள்? அதற்கென்ன செய்வது? என்று சிலர் வினவுவர். இதுவும் உண்மைதான். உலகத்தில் நமது சங்கற்பப்படி எதுவும் நடைபெறுகிறதில்லை என்பது சரியே. அப்படி யதேச்சையாகச் சம்பவித்துவிட்டால், தமது ஆற்றலினாலே அவர்களை அடக்கி நல்வழிப் படுத்தவேண்டும். அதுவும் இயலாதுபோயின் தாமரை இலையிற்பட்ட நீர்போல பற்று இருப்பதுபோலக் காட்டி யுக்தப்படி விலகியும் நெருங்கியும் இருந்து வாழ்நாட்களைக் கழித்தல் வேண்டும். இப்பேர்ப் பட்ட நிலைகளை வகிக்கப் புராண இதிகாசங்களிலே உதாரண பூர்வமாக எத்தனையோ கதைகள் கூறப்படுகின்றன. அவற்றைவிட நமக்கு உற்றதுணை வேறேதும் இல்லை யென்பதை நாம் நன்கு அறியக்கடவோம்.

---




## "கல்விப் பொருளும் காரிகையாரும்"

**கா. நயினுர் முகம்மது.**

வான்கடல் சூழ்ந்த வையத்தே தோன்றிய மக்கள், "அரிதரிது மானிடராய்ப் பிறத்தலரிது" என்ற ஒளவைப்பிராட்டியாரின் அரும்புகழ்ப்பாடல் பெற்ற மக்கள், தோன்றும்போழ்தே உடன்ருேன்றியதூஉம், விலங்கையும் மக்களையும் வேறு பிரித்தறியக் கருவியாய் விளங்குவதுவும், மக்களை மறுமைக்கண் மாண்புறவைக்கும் வன்மை வாய்ந்ததுமாயுள்ள ஒன்றையே கல்வி, கல்வி எனக் கற்ருேர் கூறுவர்.

இத்தகைய கல்வியின் இனிய மாண்பென்னை? இக்கல்வி ஏந்திழையார்க்கு இன்றியமையாததா? அவசியமின்றேல் நம் அரும் பெண்மணிகட்கு எத்தகைக் கல்வி வேண்டற்பாலது? என்பனபற்றி ஆராய்தலே இக்கட்டுரையின் முக்கிய நோக்கமாகும்.

**கல்வியின் கவின் பெருமாண்பு:—**

உலகில் மக்கள் துய்த்தற்குரிய பண்புகள் பலப்பல. அவை; நல்லன, தீயன என இருவகைப்படும். இவ்விரண்டும் ஒன்ருெடொன்று தொடர்பு கொண்டு பின்னிக்கிடத்தலான், இவ்விரண்டையும் பிரித்தறிய 'அறிவு' எனும் அருங்கருவி யொன்று வேண்டற்பாலது. இக்கருவி, மக்கள் சிலர்க்கு இயற்கையிலேயே கைகூடினும், கல்வியின்றேல் விரைவில் அழிந்துவிடும். ஆகவே, இக் கருவி வலியுடனிற்க வேண்டுமேல், 'கல்வி' என்றவோர் துணையைப் பின்பற்றல் அத்தியாவசியம். இவ்வுண்மை யுணர்ந்த நம் பொய்யில் புலவரும்,

"தொட்டனைத் தூறுமணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறுமறிவு"

எனப்புகன்ற பொன் மொழியும் உன்னுந்தகைத்து. எனவே, மக்கள் இம்மையிலேயே வெங்நெறி விடுத்துச் செங்நெறியில் நடக்கவேண்டுமேல் கல்வியெனும் ஊன்றுகோலொன்று வேண்டற்பாலதென விளம்பவேண்டுவதில்லை.

இம்மைக்குக் கல்வி அவசியமென இதுகாறுங்கண்டோம். இனி மறுமையையும் கல்வியே அளிக்கவல்லதாவெனச் சிறிது காண்பாம். ஆண்டவன்றிருவடியை யடையவேண்டுமெனும் ஆர்வமுடைய ஆன்மாக்கள், அரிய கல்வியில்லையேல், அமலனின்றிருவடியை யடையவியலா. என்னை? ஆண்டவன் றிருவடியை யடையவேண்டுமேல், இடையில் அலகிலா அல்லல்விளையுமென்பது ஆன்ருேர் தம் அனுபவத்திற்கண்ட உண்மை. அவ்வல்லலை யழிக்கக்

கல்வியெனும் ஆயுதத்தைக் கைக்கொள்ளவேண்டும். இவ்வுண்மையை, நான்மணிக்கடிகை யாசிரியர்,

" கற்பக்கழிமட மஃமகுட மஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணரும் கோளுணர்ந்தால்
தத்துவமான நெறிபடருமந் நெறி
இப்பாலுலகத் திசைநிறீ இயுப்பால்
உயர்ந்தவுல கம்புகும்"

என நன்கு நவில்வர். இத்தமிழ்ப்பாடையின் மட்டுமென்றி வேறுபாடைகளினும் இதன் மாண்பைத் தெரிவிக்கப் பற்பல சான்றுகளுள்ளன. எடுத்துக்காட்டாக, இற்றைக்குச் சற்றேறக்குறைய 750 வருடங்கட்குமுன் பாரசீகக் கவிகளுட்சிறந்து, தனது இஸ்லாமியச் சமயத்தையும் பிறசமயங்களையும் ஆராய்ந்து அடங்கிய பெரியாராகிய சஃதி (Sadi) என்பவர், தாமியற்றிய 'கரீமா' எனும் நூலில், 'சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைத் தெரிவிக்கும் ஈரடிகளில்' கல்வியின் மாண்புகுறித்து ஓர் செய்யுள் செப்புகின்றனர். அறிஞர் அச்செய்யுளை யூன்றியாய்க.

அச்செய்யுள்:—

" பிரோதாமனே இல்முகீரஸ்துவார்—கே,
இல்மத்ரசானத் பதாருல்கரார்"

இதன்பொருள்:—நீ கல்வியின் முன்றானையைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொள். அஃது உன்னைத் துறக்கமடைவிக்கும்." ஆகவே, மக்கட்கு, இம்மையும் மறுமையும் வழங்கும் மாண்பே கல்வியின் மாண்பெனக.

கல்வி காரிகையாருக் கவசியமா ?

மக்கள் என்ற பொதுவில் மாதரும் அடங்குவர். மாதர்கள் மாண்புற வியற்றும் அறங்கள் பலவற்றுள்ளும் சிறந்தன இல்லற தர்மம், கணவனுடன் அன்போடொழுகல், கற்பைக் காத்தல் முதலியனவாகும். எனவே, இவ்வறங்களை யியற்றக் கல்வி அவசியமா? எனச் சிறிது காண்பாம்.

1. இல்லற மியற்றல்:—

இயற்கை யெழில் வாய்ந்த ஏந்திழையார், ஓர் ஆடவனை மணந்து இல்லறம் நடாத்த இறங்கும்போழ்து, அவ்வுளம் அன்னார்க்கு இருள்செறிந்த காடாகவே தோன்றும். முதலில் அக்காட்டுள் பற்பல அல்லல்விளையும் என்பது அறிஞர் கண்ட உண்மை. ஆகவே, அவ்விருளிரிய அன்னார் கல்வியெனும் சுடர்விளக்கொன்றைப் பிடித்துச் செல்வரேல், அக்காடு இயற்கையெழில்வாய்ந்த இனியநாடாய் முடியுமென்பதிலையமிலை. அஞ்ஞான்று அன்னார் அலகிலாவின்பந் துய்த்து இல்லறத்தை இனிதின் இயற்றுவர். இஃதன்றியும் இல்லறத்தின், உட்பிரிவுகளாகிய விருந்தோம்பல், மக்கட்பேறு முதலிய யாவற்றினுக்கும் 'கல்வி' அவசியமே. ஆகவே, இல்லறத்தை இனிதியற்றும் ஏந்திழையார்க்கும் கல்வி அவசியமே.

2. கணவனுடன் காதலோடொழுகல்

கல்விகற்ற ஒருத்தி கணவனுடன் காதலன்போடு அன்னான் குறிப்பறிந்து நடப்பள். அவ்வுத்தமியுடன் அவன் வாழ்தல் அலகிலாவின்பமமைந்த துறக்கத்தின் சுகத்தைத் துய்த்துவாழ்தலை யொக்கும். கல்வி

யில்லாக்காரிகையார், கணவனிடம் இன்னவாறொழுகவேண்டும் எனச்சிறிதும் அறியாது நாடோறும் அவனுடன் ஒற்றுமையின்றி அளவிலாக் கஷ்டமுடன் வாழ்கின்றனர். கணவன் ஓர் நெறியைக் கடைப்பிடித்தால், தான் அதற்கு முரணான வழியைப் பற்றுகிறாள். அதுபோழ்து கலகம் பலவிளைந்து அக்குடும்பமே அலைந்தழுகிறது. இஃதன்றியும் கணவன்மட்டும் கற்றிருக்கக் காதலி கல்லாதவளாக விருப்பின், அவளுடன் கூடிவாழ்தல், நிரயத்தில் வாழ்தற்கு நிகராகும். கற்றவளாயிருப்பின் கணவன் செய்யும் வேலைகளிற் றானும் ஈடுபட்டுழைப்பள். இவ்வுண்மையுணர்ந்தே நந்தமிழ்நாட்டுப் பெரியார்கள் "காதலர்கள், ஒத்த கல்வி, ஒத்தகுணன், ஒத்தநலனுடையரா யிருத்தல் வேண்டும்" எனக்கூறினர்போலும்.

3. கற்பைக் காத்தல்:—

பெண்மணிகள் தான்றோன்றியகாலத்து உடன் றோன்றியதாய 'கற்பை'க்காக்கவும் கல்விவேண்டும். என்னை? காரிகையார் கணவர் இருக்கும்போழ்து உடன்வாழ்ந்தும், காதலன் பிரிவுற்றுழி, கணவன்மேற் பதித்த சிந்தையினராய், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு எனும் நாற்குணங்களில் வழுவாதொழுகிச் செந்நெறியிற் சிந்தையைச் செலுத்தக் கல்வியையே பற்றல்வேண்டும். கல்வியின்றேல் அன்னாரைக் கலி சூழும். கல்வியிலாமனம் வெந்நெறியில் வீழ்ந்துபடும். எனவே, கற்பென்பது மனநிறையைப் பொறுத்து நிற்பது. ஆகவே, மனதைத் தீயநெறியிற் செலுத்தாது கற்புடன் வாழவேண்டுமேல் நம் பெண்மணிகள் கல்வியைக் கடைப்பிடித்தல் வேண்டும். பின், எத்துறையில் ஆராய்ந்தாலும் அரிவையர்க்கு அருங்கல்வி அத்தியாவசியமென அறியலாம். இவ்வுண்மைபற்றியே நீதிநூலார்,

"அல்வளர் கூந்தலா ரறியநூலின்றி
நல்லறி வுணர்ந்ததி னடக்கற்பாலரோ"—என இசைப்பர்.

இந்நான்றுள கல்விமுறை ஏந்திழையார்க் கின்றியமையாதா ?

இதுபோழ்து நாகரீகக் கல்வியென்று தவறாய்க்கருதப்படுகின்ற ஆங்கிலக் கலவிமுறை யாதொரு நலனும் பயப்பதில்லை. ஆனால் தீமையையே யளிக்கிறது. அது தன் மோகவலையில் ஆடவரை யழுத்தினதோடமையாது நம் அரிவையரையும் அழுத்திவிட்டது. ஆங்கிலம் கற்கப்புகும் ஆடவரும் அரிவையரும் ஆதியில், (கற்கப்புகும் தொடக்கத்தில்) நம் ஆன்மா ஆண்டவன் திருவடிகளிற் சாந்தியடையவேண்டும். அனாவிலா ஞானத்தைதயடைய வேண்டும் என்ற உணர்வோடு கற்கப்புகுவதிலை. ஆனால், பொருள் ஈட்டல் ஒன்றையே — வயிற்றுப்பிழைப் பொன்றையே - பட்டம் பதவிகளை விழைந்தே கற்கின்றனர். கற்பிக்கும் ஆசிரியரின்மாரும் அத்தன்மையரே. எனவே, இக்கல்வி நாளுக்குநாள் நம் அருமைப் பெண்மணிகளின் நாற்குணத்தையும் நலியச்செய்து, நல்லோர்பார்த்து நகைக்கும் அநாகரீகப்படுகுழியில் ஆழ்த்திவிடுகிறது. ஆங்கிலம்படித்த அரிவையரின் உடையோ, மேனாட்டு உடை. உண்டியும் அந்நாட்டுமுறைப்படி. இத்துடன் இக்கல்வியின் நல னின்று விட்டதோவெனில்,

"கொழுநனுண்ட பின்றானுகர் கொள்கையும்,"
"கொழுநன் சொற்கடவாதுறை கொள்கையே"

என்ற சிறந்த அறங்கள் பறந்துவிட்டன. ஆங்கிலக் கல்வியிற் சிறந்த அரிவை

மார் தமது அருங்கணவன் உண்டியருந்தினும், இல்லாவிடினும், தாம் நன்றாகப்புசித்துவிட்டு நாற்காலியில் சாய்ந்துவிடுகின்றனர். கணவன் கதிர வன் கண்ணிமிட்டி எழுந்தது முதல் மறையும்வரை யுழைத்துவிட்டுத் தன் மனைக்கு வரின் அடிச்சில்சுட்டோன் (பரிசாரகன்) இலையில், ஏதோ சிறிதும் அன்பிலாமற் சாதமிட்டுச் செல்கிறான். அதை அவன் உண்டுசெல்வதே. இவ்வாறு உண்பதில் காதலர்களுக்கு ஏதேனும் இன்புண்டோ? எனக் கூர்ந்து பாருங்கள். இத்தகைய பெண்மணிகளை நோக்கி, நீங்கள் உங்கள் கணவர்க்கு, அசனத்தை அன்புடனிட்டாலென்? என யாராவது வினவின், "என்ன? அவர்கட்கு நாங்கள் அடிமைகளா? எங்கட்கும் இட்டம்போல் நடக்க உரிமையுண்டு" எனச் செப்புகின்றனர். என்னே! இவர்களின் அறியாமை. கணவற்குத் தான் பக்குவமாய்ச் சமைத்து அறுசுவையுண்டி யூட்டுதலில் அவர்க்கு அன்புபெருகி வளர்கிறது.

ஆங்கிலக் கல்விகற்ற அரும்பெண்மணிகாள் எடுத்துக்காட்டாக, பண்டே உங்கள் வழியிற்றோன்றிப் பண்புளத் தமிழ்க்கல்விபயின்ற இளையதமிழ் நங்கையொருத்தி தன் கணவற்கு எவ்வாறு அசனமிட்டு மகிழ்ந்தாள், என்ப தைக் கீழே தருகிறேன். ஊன்றி ஆராய்ந்து அவளின் ஒழுக்கத்தைப் பின் பற்றி யொழுகுங்கள்.

"தன் மகள் தனது இன்னுயிர்க்கணவனது இல்லின்கண் எப்படியிருக் கின்றாள் என்பதைக் காணும்பொருட்டுச் சென்ற செவிலித்தாய், அவ்விரு வரும் ஒத்த அன்பினராய் வாழக்கண்டு தன்னுண் மகிழ்ந்து கீழ்க்கண்டவாறு பாடுகின்றாள்."

> "முளிதயிர் பிசைந்தகாந்தள் மெல்விரல்
> கழுவுறுகலிங் கழாஅது உடீஇ
> குவளையுண்கண் குய்ப்புகை கமழத்
> தான்துழந்து அட்டதீம் புளிப்பாகர்
> இனிதெனக் கணவன் உண்டலின்
> நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல்முகனே."
>
> (குறுந்தொகை 167.)

இதன் பொருள்:—எனது அருமந்தமகள் (தன் கணவன் மேலுள்ள ஆராவன் பினால் ஏவலரும் பிறரும் சமையல் செய்வதற்கு இசையாதவளாய்) வற்றக் காய்ச்சிய கட்டித்தயிரைப் பிசைந்தகாந்தள் மலர்போன்ற சிவந்த மெல்லிய விரல்களால் இடுப்பில்கட்டிய உயர்ந்தவெண்மையான ஆடை (சமையல் செய் யும் விரைவால்) அவிழ்ந்துவிழ (கையினைக் கழுவிக்கட்டலாமென்றால் காலந் தாழ்க்கும், அதனால் கணவன் பசியால் வருந்தநேருமெனக் கருதி அதன் கண் அழுக்குப்படிதலையும் பொருட்படுத்தாது) அதனைக்கழுவாமல் உடுத் துக்கொண்டு, குவளைமலர்போன்ற மைதீட்டிய கண்களிலே தாளிப்புப்புகை பட (அப்புறம் திரும்பினால் பாகம் தவறிவிடக் கூடுமேயென்று அதனையும் பாராமல்) தான் துடுப்பினால் துழாவி மிக்க அன்போடு ஆக்கிய தித்திப்பான புளிக்குழம்பினைத் தனது கணவன் இனிது இனிதெனச் சொல்லிக்கொண்டு உண்ணுதலைப்பார்த்து எழில்மிக்க என்மகளின் முகம் உள்ளுக்குள்ளே மகிழ்வடைந்தது.

மாண்பமைந்த மாதுசிரோன்மணிகாள்! உங்களுடைய சோதரி கணவனிடம் எத்துணையன்பினளாய், எந்நிலையில் மகிழ்ந்தாள் என்பதையும் கூர்ந்து பாருமின்கள்.

ஆகவே, இவ்வாங்கிலக் கல்வி முறை இவ்வாறு உங்களை ஆக்கிவிடவே நம்மைக் குறைகூறுதல், "எய்தவர் தம் மருங்கிருக்க அம்பை நொந்த கருமமாக" வன்றோ முடியும். இக் கல்விமுறையை முதன் முதலிற் கண்ட 'லார்டு மெகாலே' என்பவரே, இக்கல்வி எந் நோக்கத்துடன் இந்தியர்களுக் களிக்கப்பட்ட தென்பதை அன்னாரே கூறுவதைக் கூர்ந்து பாருமின்கள். அவர் கூறுவது:—

"இந்தியர்களை நடையுடை பாவனைகளில் ஆங்கிலர்களாக்கக்கூடிய கல்வியை நாம் இந்தியர்களுக்குப் புகட்டவேண்டும்."

சோதரிகாள்! அன்னார் எத்துணைச் சூழ்ச்சியாக இக் கல்விமுறையை நிறுவியுள்ளார்க ளென்பதையும், நீங்கள் இஞ்ஞான்று எந்நிலை யுற்றுள்ளீர்க ளென்பதையும் கூர்ந்து நோக்குங்கள். அதுபோழ்துதான் லார்டு மெகாலே யுடைய சூழ்ச்சித்தன்மை நன்கு விளங்கிவிடும். எனவே, இக்காலக் கல்வி நம் மாதுசிரோன்மணிகளை அடியோடு கெடுத்துத் தம் அநாகரீகத்தில் ஆழ்த்தித் தமக்கு அடிபணியச் செய்துவிடுகிறது. நம் பெண்மணிகள் கள்ள மற்ற உள்ள முடையவர்களாதலின் விரைவில் அப் படுகுழியில் விழுந்து விடுகின்றனர். அன்னார் நடையுடை பாவனைகள் முற்றிலும் மாறி அறிஞர் கண்டு இரங்கத் தக்க அநாகரீக ஆங்கிலமயமாய் விடுகின்றனர். ஆதலால் நமது நாட்டுப் போக்குக்கு ஏற்ற குடும்ப நிர்வாகத்திற்குரிய நல்ல கல்வி கற்று நாட்டை அலங்கரிப்பார்களாக.

## பெண்மணிகட்கு எத்தகைய கல்வி வேண்டற்பாலது?

மேனாட்டுக் கல்விமுறை ஆடவரின் இயற்கைக்கும் பெண்களின் இயல்புக்கும் தக்கவாறு போதிப்பதில்லை. ஆனால், இருவர்க்கும் ஒரே மாதிரியான கல்வியே கற்பிக்கப்படுவதாற்றான், நம் பெண்மணிகள் தம் இயற்கைக்கு மாறான பழக்கவழக்கங்களைக் கையாள நேர்கிறது. இயற்கையமைப் பிற்கிணங்க நம் மாதுசிரோன்மணிகட்குச், சமையன்முறை, இல்லற மியற்றல், பிள்ளைப்பேறு, மனைப்பண்பு, தையல், இசைஞானம் முதலியவற்றைப் போதிக்கும் நூல்களையே கற்பித்தல் அத்தியாவசியம். அவைதான் அன்னார்க்கு நலமளிக்கும். இம்முறையைக் கையாள ஆங்கிலங் கற்கவேண்டுவதில்லை. இம்முறைகளை யுணர்த்தும் நூல்கள் அவரவர் தாய்பாஷையிலேயே அளவிறந்தன கிடக்கின்றன. எடுத்துக்காட்டாகா தமிழ்நாட்டுப் பெண்மணிகளை யெடுத்துக்கொண்டால், அன்னார், கல்விகற்ற கவிஞானிகளாய், கண்ணியமிக்க புண்ணியசீலர்களாய், இல்லறஞானிகளாய், இசை ஞானிகளாய் வாற்கு அன்னார் தமிழ்ப் பாடையிலுள்ள நூல் கற்றலே சாலும். அப்பாடையில், கடவுளைக்காணும் நெறியையுணர்த்தும் கவினுடைக்கலைகளில்லையா? இல்லறஞானத்தை இனிதினுணர்த்தும் இங்கிதநூல்களில்லையா? அடிசில் அடும் அமைவைக்கூறும் அருமைக்கலைகளில்லையா? என்ன இல்லை? எல்லா நூல்களுமிருக்கின்றன.

எனவே, நம்பெண்மணிகட்கு இயற்கைக்கேற்றவாறு போதிக்கும் கல்வி முறையே வேண்டற்பாலது. எடுத்துக்காட்டாக இஞ்ஞான்று இரவீந்திரால்

ஏற்படுத்தப்பட்டுள ‘சாந்திநிகேதனில்’ எத்தகைக் கல்விமுறை அமைந் துளதெனப் பார்ப்பீர்களேல், ஆங்கு ஆடவரின் இயற்கைக்குத்தக சிலம்ப வித்தை, தொழின்முறை முதலியவற்றையும் அரிவையர் இயற்கைக்குத்தக சமையல் முறை, மருத்துவம், மனைப்பண்பு முதலியவற்றையுணர்த்தும் நூல் களே அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். ஆகவே, நம்பெண்மணிகட்கு அவர்களின் இயற்கைக்குத்தக்க முறையான கல்வியே இஞ்ஞான்றும் எஞ் ஞான்றும் வேண்டற்பாலதென்பது நனிவிளங்கும்.

கண்ணியமிக்க காரிகைகாள்! இஞ்ஞான்று ஆங்கிலங்கற்று வெறும் பட்டம் பதவிகளைவேட்டு, அறிஞர்களால் அநாகரீகமெனக் கருதப்படும் மேனாட்டுப் பழக்கத்தை யறவே யொழித்து நுங்கள் பரதநாட்டுத் தாய்மார் களின் எளியவாழ்க்கையை மேற்கொள்ள முன்வாருங்கள். இதுவே நீங்கள் அடையவேண்டிய முன்னேற்றத்திற்கு வழி. இஞ்ஞான்று பாரதமாதாவின் பழம்புதல்வியாய் நுங்கள் சோதரியாய்த் தோன்றியுள, திருநிறைசெல்வி, ‘சரோஜனிதேவி’ யவர்கள் தமது வாழ்க்கையின் உயர்வைக்குறித்து என்ன கூறுகின்றார் என்பதைக் கூர்ந்துபாருமின்கள்.

“நான் யார்? நான் இந்தியக் கிராமங்களில் வசிக்கும் மாதர்களின் சின்னமாவேன். நதியில் ஸ்நானம்செய்துவிட்டு இடுப்பில் தண்ணீர்க்குடத் துடன் வருபவள் நான். பனையோலை வேய்ந்து குடிசையில அடுப்புமூட்டு பவள் நான்.” (இஃது கல்கத்தா சர்வகலாசாலைப் பட்டமளிப்பு விழாவில் ஆற்றிய சொற்பொழிவு.)

அருமைச் சோதரிகாள்! அம்மாளின் எளிய வாழ்க்கையைப் பின்பற்றி அறிஞரால் அநாகரீகமெனக் கருதப்படும் தற்காலக் கல்வி முறையை யொழி த்து அமைதியுடைய கல்வியைக்கற்க எழுமின்; எழுமின். இளம்பெண்காள் எழுமின்.

பல ஒரு பிடி அரிசி ஒரு ஏழையின் பசியைத் தணிக்கும்.

மனம் நொந்து, பஞ்ச பூதங்களும் ஒடுங்கி “அம்மா! ஐயா! அரிசி” என்று பிச்சைக்கு வருபவர்களுக்கு ஏதாவது உன்னாலானது ஒரு பிடி அரிசி போடு. பசி பொல்லாதது. ‘தினந்தோறும் எத்தனை பிச்சைக்காரர்களுக்குப் போடுகிறது?’ என்று சொல்லாதே! இதனால் தரித்திரர் ஆகிவிடமாட் டோம். பத்து வீடுகளில் பத்து பிடி அரிசி சேர்ந்தால் ஒரு ஏழையின் வயிறு நிறம்புகிறது. நீ சிறிது இரக்கம் காட்டி னால்தான் உன்னிடம் பகவானுக்கும் அன்பு உண்டாகும். உலக விஷயமெல்லாம் பரிவர்த்தனை தானே.

# ஜோதிடப் பகுதி.

(53-ம் பக்கத் தொடர்ச்சி)

இராயவேலூர் வேலப்பாடி பாலசோதிட வித்வ ஸ்ரீமான் வ. கு. வேலு நாயகரவர்கள் எழுதியது:—

**முக்கியகவனிப்பு:**—சென்ற பிரசுரம் 51-ம் பக்கத்தில் "வடிவேலு நாயகர்" என்றிருப்பதை "வ. கு. வேலுநாயகர்" எனவும், 6-ம் வரியில் "அம்புயத்தவளையாரும்" என்றிருப்பதை "அம்புயத் திருவைப்பெற்ற" எனவும் வாசகர்கள் திருத்திக்கொள்வார்களாக.

முன்னர் கூறிய நாமதேய (பெயரிடும்) அக்கரத்தின் விஷயத்தைக் குறித்து மறுமுறை ஓர் கட்டுரைத் தெளிவாக வரைவாம். ஆண்டு இது சம்பந்தமான விஷயங்களை நேயர்கள் தெள்ளத்தெளிந் துய்யலாம்.

மற்றும் ஆசிரியர் வராஹ மிசிரனரவர்கள் தமது பிருகத் சம்ஹிதை 2-ம் அத்தியாயத்து மூன்று-நான்கு ஆகிய சுலோகங்களில் "சோதிடன் கிரகஸ் புடம், யுகம், வருடம், அயனம், இருது, மாதம், பட்சம், தினபிரமாணம், முகூர்த்தம், மணி (ஓரை), நிமிடம், திருடி (கைந்நொடிப்பொழுது) முதலிய காலவியவகாரங்களையும், இராசி—பாகை—கலை—விகலை முதலிய க்ஷேத்திர வியவசாரங்களையும் தெரிந்தவனு யிருத்தல்வேண்டும். மற்றும் சௌரமானம், சாந்திரமானம், நக்ஷத்திரமானம், சாவனமான முதலிய நான்கு விதமான காலமானங்களையும், மாசம், அதிமாசம், க்ஷயமாசம் ஆகியவற்றினுடைய காரணங்களைத் தெரிந்தவனுயும் இருத்தல்வேண்டும்" எனக்கூறியுளார்.

குறிப்பு:—(முக்கியமாய் வாசகர்கள் கவனிக்கவேண்டியது) பஞ்சாங்கங்கள் சித்தாந்தம், வாக்கியம், திருக்கணிதம் என மூன்று வகை இக்காலத்தில் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன. இவற்றுள் சித்தாநதம் சிருஷ்டியாதியாகவும், வாக்கியம் யுகாதியாகவும், திருக்கணிதம் குறிப்பிட்ட ஓர் காலத்திலிருந்தும் எண்ணிக் கணிக்கப்பட்டு வருகின்றது. சித்தாந்தம் வாக்கியம் என்னும் இருதிறத்துப் பஞ்சாங்கங்களில் ஓர் சௌரவருட பிரமாண நாள் 365, நாழிகை 15, விநாடி 31, தற்பரை 15 ஆகவும், திருக்கணிதப்படி ஓர் சௌரவருட பிரமாண நாள் 365, நாழிகை 15, விநாடி * 22, தற்பரை 52 ஆகவும் சொல்லப்பட்டிருக்கின்றது. முதலிரண்டும் ஒரு தன்மையுடைத்தாய் காரியமாயிருக்கினும் விநாடி ஸ்தானத்தில் மட்டும் சொற்ப வித்தியாசமுடையதா யிருக்கின்றது. முதலிரண்டுக்கும் மூன்றுவதான திருக்கணிதத்திற்கும் ஒவ்வொன்றிற்கு 8 விநாடி 23 தற்பரை வித்தியாசப்

---

* அர்க்சோதய நியாயப்படி விநாடி 23 ஆகக்கொள்க.

பட்டிருக்கின்றது. இதனாலேயும், மற்றும் மாதப் பிரமாணத்திலுள்ள சிற்சில வேறுபாட்டினாலேயும் வாக்கிய-சித்தாந்த பஞ்சாங்கங்கட்கும், திருக்கணித பஞ்சாங்கத்திற்கும் மாதப்பிறப்பு, வருடப்பிறப்பு, கால நிர்ணயங்கள் ஒவ்வோர் சமயத்தில் வித்தியாசப்படுவதுண்டு. இதனை நமது வாசகர்களும் அறிந்திருப்பார்கள். அறிந்தும் சிலசமயங்களில் இதன் உண்மை இன்னதென்றறியாமல் திருக்கணித பஞ்சாங்கம் சரியல்ல, இது சமீப காலத்தில் ஏற்பட்டது, அது தவறுடையது, வாக்கிய சித்தாந்தப் பஞ்சாங்கங்களே சரியானது என்று பேசிக்கொள்வதை யாம் பன்முறை கேட்டிருக்கின்றோம். வாக்கிய-சித்தாந்த பஞ்சாங்கங்கட்கு மூலாதாரமான பிரம்ம சித்தாந்தம், வசிஷ்டசித்தாந்தம், சூரியசித்தாந்தம், ஆர்ய பட தந்திர முதலிய நூற்களில் "சூரிய சந்திராதி கிரகங்கட்குக் காலதீர்க்கத்தினால் (அனேக ஆயிரம் வருடங்கட்குப் பின்) வைஷம்மியம் (வித்தியாசம்) உண்டாகும், அதை நீக்கும்பொருட்டு அக்காலத்திற் பரீட்சித்தறிந்து அதற்குத்தக்கபடி கணிதத்தில் சிறந்ததை வக்ஞன் (சோதிடன்) கிரகஸ்புடங்களைச் செய்யும் பொருட்டுப் பீஜபல முதலிய சமஸ்காரங்களைச் செய்துகொள்ளல்வேண்டும்" என்ற வாக்கியப் பிரயோகங்கள் பல இருக்கின்றன. இதனை அறிந்துணர்ந்த மேதாவிகள் திருக்கணித மார்க்கத்தை ஏற்படுத்தியிருக்கின்றனர். ஆதலின் திருக்கணிதமே சாஸ்திரீயமான சுத்தபஞ்சாங்கமாகும். விரிப்பிற் பெருகும். திருக்கணிதப்படி மாதப்பிரமாணங்கள் வருமாறு:—

## மாதப் பிரமாணம்.

| [சைத்ரபட்சம்] *திருக்கணிதப்படி | | | | வாக்கிய சித்தாந்தப்படி | | |
|---|---|---|---|---|---|---|
| நாள் | நாழிகை | விநாடி | | நாள் | நாழிகை | விநாடி |
| 30 | 52 | 33 | சித்திரை | 30 | 55 | 32 |
| 31 | 16 | 50 | வைகாசி | 31 | 24 | 12 |
| 31 | 27 | 15 | ஆனி | 31 | 36 | 38 |
| 31 | 21 | 1 | ஆடி | 31 | 28 | 12 |
| 30 | 58 | 34 | ஆவணி | 31 | 2 | 10 |
| 30 | 29 | 28 | புரட்டாசி | 30 | 27 | 22 |
| 29 | 59 | 3 | ஐப்பசி | 29 | 54 | 7 |
| 29 | 36 | 14 | கார்த்திகை | 29 | 30 | 24 |
| 29 | 26 | 46 | மார்கழி | 29 | 20 | 53 |
| 29 | 32 | 32 | தை | 29 | 27 | 16 |
| 29 | 52 | 27 | மாசி | 29 | 48 | 24 |
| 30 | 21 | 40 | பங்குனி | 30 | 20 | 21 |
| ஆ. 365 | 15 | 23 | | ஆ. 365 | 15 | 31 |

இரண்டு வழிகளுக்கும் 8-விநாடி வித்தியாசப்படுதலை நன்கறியலாம்.

திருக்கணித முறைப்படி சூரியசங்கிரமணம் (சூரியன் ஒரு ராசியிலிருந்து மற்றொரு ராசிக்குப் போகும்காலம்) சூரியன் அஸ்தமயத்திற்கு

* திருக்கணிதத்திற்கூட சிலர் இதிலும் மதபேதப்படுகின்றனர் எனினும், அதிக வித்தியாசமில்லை.

முன்னதாகச் சம்பவித்தால் அந்தத் தினத்தை முதற்றெய்தியாகவும், அஸ்தமயத்திற்குப்பின் சம்பவித்தால் மறுநாள் முதற்றெய்தியாகவும், வாக்கிய-சித்தாந்தங்களின் முறைப்படி சூரியசங்கிரமணம் இரவு 45-நாழிகைக்கு முன்னுல் அன்று முதற்றெய்தியாகவும், அதற்குப்பின்னுல் மறுநாள் முதற்றெய்தியாகவும் கொள்வது முறையாகும். இதனுல்தான் இருதிறத்துப் பஞ்சாங்கங்களிலும் சிலசமயங்களில் ஒரு தேதி வித்தியாசப்பட்டு வரும். தேதிமட்டும் வித்தியாசப்படுமேயன்றி வாரம் ஒருபோதும் வித்தியாசப்பட்டு வாராது. சிலர் தேதி வித்தியாசப்பட்டபோது வாரமும் வித்தியாசமானதே என்றெண்ணி மலைப்புறுகின்றனர்.

அதிமாதம், க்ஷயமாதம் என்பவைகளைத் திருக்கணித முணர்ந்த பெரியோர்கள் சைத்திரபட்சத்தின்படி கணக்கிட்டிருத்தலின் அதனை ஈண்டு வாசகர்களுக்கு விளக்கமுறும்படி எடுத்துக்காட்டுவேமாக:—

| வருடம் | சகம் | மாதம் | வருடம் | சகம் | மாதம் |
|---|---|---|---|---|---|
| விபவ | 1850 | சிராவணம் | சித்திரபானு | 1864 | ஜேஷ்டம் |
| பிரஜோத்பத்தி | 1853 | ஆஷாடம் | பார்த்திவ | 1867 | சைத்திரம் |
| பவ | 1856 | வைசாகம் | சர்வசித்து | 1869 | சிராவணம் |
| தாது | 1858 | ஆஸ்விநம் | விகிர்தி | 1872 | ஆஷாடம் |
| பிரமாதி | 1861 | சிராவணம் | விஜய | 1875 | வைசாகம் |

சென்ற விபவ வருடத்தின் ஆனந்தபோதினி பஞ்சாங்கத்தின் 25-ம் பக்கத்தைப்பார்க்க மேற்கண்டபடி அதிக சிராவணம் எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். மேல்வரும் வருடங்களிலும் இங்ஙனமே நிகழும். அதிகமாதம் சுமார் மூன்று வருடங்கட் கொரு முறை சம்பவிக்கும். க்ஷயமாதம் நூற்றுக்குமேற்பட்ட வருடக்கணக்கில் சம்பவிக்கும். சாலிவாகன சகவூ 1885-ல் மேல்வரப்போகும் சோபகிருது ஹூத்தில் கார்த்திகை மாசத்தில் அதிகமாசமும், அதிலேயே க்ஷயமாதமும் சம்பவிக்கும். அஃது இற்றைக்கு 34 ஆண்டில் சம்பவிக்கும்.

மற்றும் ஆசிரியர் வராஹமிசிரனூரவர்கள் "ஹோரா சாஸ்த்ரே அபி-ராசி ஹோராத்ரேக்கான-நவாம்சனூ-கத்வாதசபாக - த்ரிம்சத்பாக - பலாபலபரிக்ர ஹோ - க்ரஹாணும் - திக்ஸ்தாந-கால - சேஷ்டாபிர்அநேகப்ரகார - பலநிர்தாரணம்" என்றறதொடக்கத்து 5-வது சுலோகத்தில் சோதிடனுனவன் இராசி-ஓரை-திரேகாணம் - நவாமிசம்-துவாதசாம்சம்-திரிமிசாமிசங்களின் பலாபலங்களையும், திக் - ஸ்தானம் - காலம் - சேஷ்டை (நிசர்க்கம்) முதலிய கிரகபலங்களை நிர்த்தாரணம் செய்தறியும் சக்தியுடையவனுயும், தாது, திரவியம், சேஷ்டை, நிஷேகம்; ஜனனகாலம், ஆயுர்தாயம், தசை, அந்தர்தசை, அஷ்டகவர்க்கம், இராஜயோகம், சந்திரயோகம், இரண்டு கிரகசேசரயோக முதலியவைகளைத் தெரிந்தவனுயும் இருத்தல் வேண்டுமென்று அருட்செய்துளார்.

குறிப்பு:—வாசகர்களே உங்கட்கு ஜாதகம் யாரேனும் எழுதிக்கொடுத்திருப்பின் அதில் இலக்கின ஸ்புடம், துவாதசபாவக ஸ்புடம், தூமாதிகுளிகாதியர் ஸ்புடம், பாவசக்கரம், கிரக ஸ்புடம், தசவர்க்கம், ஆகிய இந்த ஸ்புடங்கள் இருப்பின் அது கணித முறையுணர்ந்து எழுதப்பட்டதெனவும், இன்றேல் பெரும்போக்காக, ஸ்தூலமாக எழுதப்பட்டதென்றும் அறிந்து கொள்ளுங்கள். கணிதமுறை ஜாதகமே முதற்றரமானது. (தொடரும்.)

# நல்லொழுக்கம்.

வே. ச. சோக்கலிங்கம் எழுதியது.

உலகத்திலேயுள்ள மக்கள் யாவராலும் வேண்டப்படுவதும், கைக்கொள்ளப்படுவதும் ஒழுக்கமேயாகும். எவ்விதமான ஒழுக்கம் யாவராலும் விரும்பப்படுவது எனின் நல்லொழுக்கமேயாகும். அடைதற்கரிய மானிட ஜென்மத்தை எடுத்த நாமெல்லோரும் இவ்வித ஜென்மம் எடுத்ததின் பிரயோஜனமாக இவ்வுலகின்கண்ணே நல்லொழுக்கத்தை அநுட்டித்து நடப்போமாயின் சகலவிதமான சௌகர்யங்களும் கிடைப்பதோடுகூட நல்லொழுக்கத்தை அநுட்டிப்பவர்களின் கீர்த்தியானது அவர்கள் ஜீவிய காலத்திலும் அதன் பின்னரும் அழியாது ஜொலித்துக்கொண்டிருக்கும். நல்லொழுக்கத்தை யநுட்டித்துச் சுயநலம் பாராட்டாது பொதுநல சேவை செய்யும் ஒருவரை உலகோர் கொண்டாடுவார்கள் என்று சொல்லவும் வேண்டுமோ. நல்ல ஒழுக்கத்தை நான்கு விதமாக அநுட்டிக்கலாம். எப்படி யென்றால் அன்பு, அகிம்சை, சத்தியம், பொதுநலசேவை யென்னும் நான்கையும் அடிப்படையாகக் கொண்டு "கற்கக் கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக." என்றபடி மேற்சொன்ன நான்குவித வாக்கியங்களின் சாராம்சங்களை உணர்ந்து அதன்படி நடக்கப் பழகினால் 'வருவான் குரு தன் வழிமேலே' என்னும் வாக்கியத்திற் கிணங்க மற்றவர்களுக்கு ஓர் வழிகாட்டியாய் இருக்க முடியும் என்று நினைக்கின்றேன். அன்றியும் ஒழுக்கத்திற் சிறந்த எவர்களும் தங்கள் ஒழுக்கத்தின் சக்தியால் மற்றவர்களை வெல்லுகின்றனர். உதாரணமாய் திரு. காந்தியின் சிறந்த ஒழுக்கமானது அவரை மகாத்மாவாக்கி எவ்வளவு மதிப்புக்கிடமாய் வைத்திருக்கின்றது. ஓர் மனிதன் தன் துர்க்குணங்களை நீக்கிச் சீராக்கிக்கொண்டால் ஒழிய அவன் எவ்வளவு இழிவான வஸ்துவாக இருப்பான் என்று டேனியல் என்னும் கவிஞர் கூறியிருக்கின்றார். மேற்சொன்ன நான்கு வாக்கியங்களையும் ஆராய்வோம். முதலாவது அன்பை எடுத்துக்கொள்வோம். அன்பாவது இயற்கையிலேயே சர்வாத்மாக்களுக்கும் ஒரே கடவுளாயும் எல்லா மக்களுக்கும் பொதுவாயும் உள்ள ஒரே வஸ்துவை யறிந்து எவ்வுயிர்களையும் தன்னைப்போல் பாவித்து 'அனைத்துயிர் ஒன்றென்றெண்ணி, அரும்பசி யெவர்க்கும் ஆற்றி, மனத்துளே பேதா பேதம், வஞ்சம், பொய், களவு, சூது, சினத்தையும் தவிர்ப்பாயாகில் செய்தவம் வேறொன்றுண்டோ, உனக்கிது உறுதியான உபதேசம் ஆகும்தானே' என்னும் வாக்குப்படி நடப்பதே அன்பு நெறியாகும். இரண்டாவது அஹிம்ஸா தருமமாவது எல்லா ஜீவன்களும் ஒன்றே யென்று ஒருவர்க்கும் யாதொருவித இடையூறும் செய்யக்கூடாது என்றும் அறிந்து 'கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி எல்லா உயிருந் தொழும்' என்ற

படி ஜீவகாருண்யத்தைக் கைக்கொண்டு நடந்து 'இன்சொலால் இருநீர்விய னுலகம் மகிழுமே யன்றி வன்சொலால் என்றும் மகிழாதே' என்றபடியும் யாவர்க்கும் துன்பம் பயக்காத இன்னுரை பகர்ந்தும் (overcome not by force but by kindness) என்று ஆங்கிலத்தில் ஓர் பழமொழியுண்டு. அதாவது பலவந்தத்தினால் அல்ல, பட்சத்தினால் வெல்லு என்றபடியும் யாவருடனும் துவேஷம் பாராட்டாது, வன்மையாய்ப் பேசாது, நன்றியறிதலுடனும் சந்தோஷத்துடனும் ஒற்றுமையுடனும் பேசி உறவாடி நடந்துகொள்வதே அஹிம்ஸாத் தருமமாகும். சத்தியமாவது அன்பு நெறிக்கும் அஹிம்ஸா தருமத்துக்கும் மாறுபடாது இயற்கை வழியில் மனச்சாட்சியாகிய "பகுத்தறிவு" என்னும் கடவுளுக்கு விரோதமில்லாமல், எவ்வழியில் நடக்கின் நன்மை பயக்குமோ அவ்வழியில் நின்று வாய்மை நெறிதவறாது ஒழுகித் தூய்மையாக நடப்பதே சத்தியமாகும். பொதுநல சேவையாவது பொதுநல சேவை யென்று சொன்ன வுடனே பொதுநலத்திற்காகப் பாடுபட்டால் எங்கள் பிழைப்புக் கெட்டுவிடுமே, அப்புற மெப்படி என்று கேட்கின்றார்கள். அப்படியல்ல; மக்கள் யாவரும் பொதுநல சேவைக்காகவே பிறக்கின்றார்கள். சுயநலத்துக்கன்று. எப்படியெனில் ஒருவன் பிறந்து பெரியவனாகியதும், தாய் தந்தையருக்கு உழைக்க வேண்டியவனும், விவாகமானபின் மனைவிமக்களுக்காகப் பாடுபட்டுழைத்துக் காப்பாற்ற வேண்டியவனும், இத்துடன் சுற்ற மித்திரர்களை நேசித்துப் போஷிக்க வேண்டியவனும் இருக்கின்றான். இவ்வகையில் உணர்ந்து பார்க்கின் ஒருவன் பிறப்பது தன்னலத்துக்கு மாத்திரமன்றி பொதுநல சேவைக்காகவுமே பிறக்கின்றான் என்பது விளங்கும். ஆதலின் இயற்கைச் சத்தியாகிய ஆத்மாவானது எல்லா மக்களிலும் ஒரே தன்மையாய் விளங்குகிறதை யுணர்ந்து எங்கள் தாய் நாட்டுக்காகவும் தாய்நாட்டு முறைமையால் உள்ள சகோதரர்களுக்காகவும் பாடுபட்டு தேசத்தொண்டு புரிந்து 'அன்பர்பணி செய்யவெனை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்பநிலைதானே வந்தெய்தும் பராபரமே' என்பதை யுணர்ந்து உண்மையை யறிந்த வழி நின்று தேசத்தொண்டு புரிவதே பொதுநலச் சேவையாகும்.

எனதரிய சகோதர சகோதரர்களே! இவையன்றியும் மேன்மை தங்கிய மேதாவிகளும் பெரியோர்களும் சொல்லியிருக்கின்றதைக் கவனியுங்கள்.

'மனிதன் தன் பிறவிக் குற்றங்களைத் தீர்த்துக்கொண்டு ஒழுக்கத்தின் பாற்பட்டாலன்றி எவ்வளவு இழிபொருள் ஆவான்' என்று தாளியல் என்பவரும்! 'ஒழுக்கமென்பது ஒவ்வொரு ஜீவாத்மாவின் இயற்கைக் குணம்பற்றி ஆய்ந்தறிந்த நன்னெறிப்பாங்கே யாகும். ஒழுக்கமுடையோர் தாம் சார்ந்த ஜனசமூகத்தினுக்கு மனச்சான்று போல்வார்' என்று எமர்சன் என்பவரும், ஓர் நாட்டின் உயர்விற்கும், ஆக்கத்திற்கும் உள்ள சார்பானது, மிகுந்த பகுதிப் பணமுமன்று, பலத்த கோட்டையுமன்று, அழகிய மாடமாளிகையுமன்று, அகங்காரமும் சுயநலமுங்கொண்ட பாதகர்களுமன்று, ஆனால் நாட்

டாண்மைக்காரர் தொகுதிக்கும் கல்வி, தெளிவு மேன்மை தங்கிய ஒழுக்க முள்ள குடிகளுக்கும் தக்கவாறேயாம். இதிற்றான் அத்தேசத்தின் உண்மையான நயமும், முக்கியமான பலமும், சுயமான சக்தியும் தங்கியிருக்கின்றன' என்று ஜர்மன் தேசத்தின் பெரிய மேதாவி யாகிய மார்டின் லூதர் என்பவரும், 'நல்லொழுக்கமானது மனிதப் பேற்றினுக்குச் சிறந்த தூண்டு கருவியாகின்றது. அது மனிதனை அவனுக் குரிய சிறந்த நற்குணத்தில் புலப்படுத்துகின்றது' என்று ஸ்மைல்ஸ் என்பவரும், 'சத்தியமும், அந்தரங்க நன்மையும் இல்லாத ஊக்கமானது தீமையின் கொள்கையுருக் கொண்டாற் போன்றதே. சன்மார்க்க வரம் பினுக்கு அறிகுறியாய் நிற்பவருக்கு இடையூறாய் நிற்பவர் யாரென்றால், நாகரிக மின்மையின் பூரணம்சம் பூண்டவரும், பலத்தையும் ஊக்கத்தையும் வரம்பு கண்டவருமாகிய கொடியோரைத் தவிர வேறிலர். ஊக்கமும் பலமு முடைய இவர் மமதை, அதிகார இச்சை, தன்னயம் பாராட்டல் ஆகிய துர்க் குணங்கள் தக்கபடி கூடில், பேயின் முழுவடிவினரே யாவர். இம்மாதிரி யானவர் மனித உலகத்தைத் துன்பப்படுத்திப் பாழாக்குவதில் சிறந்தவராகக் காணப் படுகின்றனர். பொறுக்கி யெடுத்த இப்பாதகரை, இம் மண்ணுல கத்தை யழிப்பதற்குரிய உத்தியோகத்தைச் செலுத்துமாறு கடவுள் கட்டளை யிட்ட நோக்கமானது அறிதற்பான்மைய தன்று' என்றும் ஆங்கிலப் பெரி யாரான நோவலிஸ் என்பவரும் சொல்லி யிருக்கின்றார்.

அறிவிற் சிறந்த பெரியோர்களே! மேற் சொல்லியவைகளை ஆராய்ந்து பார்த்துக் குற்றங் குறைகளிருக்கின் பொறுக்குமாறு கேட்டுக் கொள்ளு கிறேன். இத்துடன், எனது நண்பர்களையும், அரிய சகோதர சகோதரி களையும் வேண்டிக்கொள்வது யாதெனில், மேற் சொல்லியவைகளை நன்கு வாசித்துணர்ந்தும், உங்கள் நன்மைக்குரிய ஊக்கத்தோடு ஒழுக்கத்தையும், கல்வி தேச நன்மைக்குரிய பொது நலச்சேவையாகிய இவைகளையும், அறிந் தார் பால் கேட்டு அதன்படி ஒழுகுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

### நிமிஷத்தில் கெட்ட பெயர்

நான்கு ஸ்திரீகள் உள்ள இடத்தில் நீ நிற்காதே. அதுவும் விவாக கும்பலிலே வெகு ஜாக்கிரதையாய் இரு. பாம்போடு விளையாடுவதென்று நினைத்து விலகி யிரு. எந்தப் பாம்பு எந்த புற்றிலிருக்குமோ யார் கண் டார்! கடைசியில் வீண் மனஸ்தாபத்திற்கும் அவ மானத்திற்கும், பழிக்கும் நாமேன் பாத்திராக வேண் டும்?

# மனித வாழ்க்கை.

உலகில் உள்ள ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர் நாலறிவுயிர், ஐயறிவுயிர் என்பவைகளுக்கெல்லாம் மேலாகிய ஆறறிவுடைய மனிதப் பிறப்பே சிரேஷ்டமானது. இம்மனிதப் பிறப்பே இம்மை மறுமை யின்பங்களை யனுபவிக்கும் பெற்றியை யுடையது.

ஆனால் அஷ்ட வசுக்கள், இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன் முதலிய முப்பத்து மூக்கோடி தேவர்களாகவும், இயக்கர், கின்னரர், கிம்புருடர், வித்தியாதரர்களாகவும் பிறக்கும் பிறப்பில் இன்பமில்லையோ வென்றால், இன்பம் உண்டு; ஆனால் அவ்வின்பம் மனிதர்கள் அனுபவிக்கும்படியான இன்பத்தைக் காட்டிலும் இலட்சம் மடங்கு மேலானதே. அப்படி யிருந்தபோதிலும் அத்தேவர்கள் செய்துள்ள புண்ணியங்கள் பூர்த்தியானவுடன் அவ்வின்பங்களு மழிந்து வினைக்கேற்றபடி பல விதமாகிய பிறப்புக்களை யெடுத்து வருந்த வேண்டியதா யிருக்கும். அன்றியும் நரகங்களையும் அனுபவிக்கும்படி நேரும். இதனால் புண்ணியத்தைச் செய்தவர்கள் தேவர்களாய்ப் பிறந்து தேவ போகத்தை யனுபவிப்பார்களெனவும், அப்புண்ணியம் பூர்த்தியானதும், பாவ வினைக்குத் தக்கபடி நரக லோகத்தை யநுபவிப்பார்களெனவும் சாஸ்திரங்கள் எடுத்துக் கூறுகின்றன. இரவும் பகலும் மாறிமாறி வந்து கொண்டிருப்பது போல ஆத்துமாக்களின் புண்ணிய பாவங்களினாலே தேவர்களாகவும், நரர்களாகவும், பிறந்து தளர வேண்டியதாயிருக்கிறது. ஆகையால் தேவர்களாகப் பிறப்பதில் எள்ளளவும் சுகமென்பதே யில்லை. இதனால் "போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்" எனத் தமிழ்மறை யோதுகின்றது. இவ்வாறு நேரிடும் விஷயம் எதனாலென்று ஆலோசித்தால் ஆத்மாக்கள் புரிந்த புண்ணிய பாவமே.

இதனாலன்றோ பெரியோர்கள் "எண்ணிலாத நெடுங்காலம் எண்ணிலாத பல பிறவி யெடுத்தே யிளைத்திங்கனை நீங்கி யிம்மானிடத்தில் வந்துதித்து" என்று திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றார்கள். இதனால் மானிடப் பிறப்பையே மேலானதென்று கொள்ள வேண்டும். ஏன் மேம்பட்டது என்றால் மறுபடியும் பிறப்பில்லாமல்படிக்குச் செய்துகொள்ளக்கூடியதா யிருப்பதினாலே. அப்படியானால் எல்லா மனிதர்களும் மோட்ச மடைய வேண்டுமே? ஏன் மோட்ச மடையாமல் பிறந்து பிறந்து இறந்து போகின்றார்கள்? என்று நினைக்கக் கூடும். அதை விவரிப்போம்.

நாம் தேவர் விலங்கு பறவை தாவரம் முதலாகிய பிறப்புக்களை யெடுத்துத் துன்பத்தை யடையுங் காலங்களி லெல்லாம் ஒரு மானிடச் சரீரம் கொடுத்தால் அது கொண்டு உன் திருவடியையடைவேன் என்று பலமுறை கடவுளை வேண்டிக் கொண்டமையினாலே அவர் இரங்கி இச்சரீரந் தந்தனர். இதை நாம் தாயார் வயிற்றிலிருந்து பிறந்ததும் மாய வாழ்க்கையில் இச்சை கொண்டு கடவுள் திருவடியை மறந்து பிறந்திறந்து பூமியில் தடுமாற்ற மடைகின்றோம். ஆகையால் பெரியோர்கள் பூமியில் பிறவாதிருக்க வரம் அளிக்கவேண்டு மென்றும், பிறந்துவிட்டால் இறவாதிருக்க வரம் இருக்கிற

தென்றும் பேசி யிருக்கின்றார்கள். அம்மருந்தோ கடவுளின் திருவடித் தாமரைகள் மறவாமலிருத்தலே. அதனால் தெய்வத் தன்மை பொருந்திய திருவள்ளுவ நாயனாரும்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்."

என்றபடி கடவுளின் திருவடியைச் சேர்ந்தவர்கள் கடவுளை எந்தக் காலத்திலும் மறவாமல் தியானஞ் செய்து கொண்டிருப்பவர்களென்றும் சேராதவர்கள் கடவுளின் திருவடியை மறந்து விட்டவர்களென்றும் கொள்ள வேண்டியதா யிருக்கிறது. கடவுளின் அடிச் சேர்தலாவது அவர் திருவடியை மறவாது தியானம் செய்தல் என்று பொருள்.

இந்த வகையாக நடவாதவர்கள் வேறு வகையாகவும் பிறப் பிறப்பைப் போக்கிக்கொள்வதற்கு மார்க்கம் உண்டு. அந்தப் படியாகிலும் செய்து பிறப்பிறப்பைப் போக்கிக் கொள்ளலாம். அதை விவரிப்பாம்.

ஒருவன் பாவ புண்ணியங்களைச் செய்யும்படியாக நேரிடுங் காலத்தில் யான் எனதென்று நினைத்துச் செய்யாமல் சகலமும் கடவுளுக்கே யுரியன வென்று செய்வோமானால், இவ்விரு வினைகளும் நம்மை வந்து பொருந்தாது. பொருந்தா தாயின், அவ்விரு வினைகளினாலே வரும் இன்ப துன்பங்களும் நமக்கில்லாமற் போம்.

அவ்வின்ப துன்பங்கள் நமக்கில்லையாயின் பிறப் பிறப்புமில்லை யென் பது தெள்ளிதின் உணரக் கூடியதா யிருக்கிறது.



# ஆகாரம்

## ஐயவினவுக்கு விடை.

சித்திரை மாதத்தில் வெளிவந்த "ஆனந்தபோதினி"யின் 542-ம் இதழில் ஆகாரம் என்னும் மகுடமிட்டு நான் வரைந்துள்ள வியாசத்தைப்பற்றி ஸ்ரீமான் நடராஜன் அவர்கள் கேட்ட சந்தேகத்திற்கு விடையளிக்க விரும்புகிறேன்.

ஆகாரம் என்னும் வியாசத்தில் பண்டைக்கால ரிஷிகளின் ஆகாரத்தை மனு, கௌதமர், சங்கரர், தேவலர் முதலிய ரிஷிகளின் ஸ்மிருதிகளில் உள்ளபடி வரைந்தேன். அதற்கு ஆதாரமான வாக்கியங்களை அடியில் வரைவேன்.

மனிதர்களுக்குத் திருஷ்ட பலமென்றும், அதிருஷ்ட பலமென்றும் பலம் இருவிதம். ஸ்மிருதிகளில் விலக்கப்பட்டிருக்கும் ஆகாரத்தைப் புசிப்பதால் அதிருஷ்ட பலம் குறைந்துபோம் என்பதை ஸ்மிருதி வாக்கியங்களைக் கொண்டே நாம் ஊகிக்கலாம்.

நான் வரைந்த வியாசத்தில் 4-வது பிரிவிற்குப் பிரமாணம்:—

"நபின்ன பாத்ரே புஞ்ஜீத நபாவப்ரதி தூஷிதே
விம்சாதிகபலே பாத்ரே புக்த்துவா சுத்யதி பூருஷ:

"கரேகர்படகே சைவஹ்யாயஸே தாம்ரபாஜனே
வடர்க்காஸ்வ தத்பர்ணேஷு புக்த்துவா சாந்திராயணம் சரேத்"

ஐந்தாவது பிரிவிற்குப் பிரமாணம்:—

ஆஸீனஃ ப்ராங்முகோ ஆஸ்னீயாத்
வாங்முகோ அன்னமகுத்ஸயன்.

ஆறாவது பிரிவிற்குப் பிரமாணம்:—

"நவேஷ்டித சிரார்சாபிகோத்சங்க க்ருதபாஜன
நைக வஸ்திரோ துஷ்டமத்யே ஸோபானத்கஃ ஸபாதுகஃ"

மனைவி, சகோதரி, தாயார் இவர்களுக்கு எதிரில் போஜனம் செய்யக் கூடாது என்பதற்குப் பிரமாணம்:—

நபார்யாதர்சனே அஸ்னீயாத் நைகவாஸாஃ
ந ஸம்ஸ்திதஃ

மனைவிக்கு எதிரில் போஜனம் செய்தால் உண்டாகும் சந்ததிக்குத்திருஷ்ட பலமும் அதிருஷ்டபலமும் குறைந்துபோகும் என்பது வேதங்களின் கருத்து.

"ஜாயாயா அந்தே நாஸ்னீயாத் அவீர்யவத பத்யம் பவதீதி" (வேதம்)

"மாதாவா பகினீவாபி பார்யாவா அந்யாஸ்ச யோஷிதஃ
தாஸாம்ஸ்ச தரிசனேபுக்த்துவா சாந்திராயணம் சரேத்"

பந்தியில் மற்றவர்களைவிட விரைவாக உண்டு எழுந்திருக்கக்கூடாது என்பதற்கு ப்ரமாணம்:—

"பங்கிபேதி ப்ருதக் பாகீ நித்யம் பிராம்மண நிந்தகஃ
ஆதேசீ வேதவிக்ரேதா பஞ்சைதே பிரம்மகாதுகாஃ"

ஸ்திரீகள் போஜனம் செய்தபிறகு மிகுதியான அன்னத்தைப் போஜனம் செய்யக்கூடாது என்பதற்கு ப்ரமாணம்:—

"உச்சிஷ்ட பிதாஸ்திரீணும் யோஸ்நியாத் பிரம்மணக்வசித்
பிரயச்சித்தி ஸவிக்யேயஃ ஸங்கீர்ணேமூட சேதனஃ இதி"

நாம் உண்ணும் ஆகாரத்தில் நகமாவது உரோமமாவது இருந்தால் அதை எடுத்து விட்டு நெய்யைத்தொட்டு மறுபடியும் போஜனம் செய்வதின் கருத்து என்னவென்றால், நகம் உரோமம் முதலியவற்றின் ஸ்பர்ஸ மாத்திரத்தால் ஆகாரம் அசுத்தமாகி விடுகிறதென்றும் நெய்யைத்தொட்டால் அது சுத்தமாகி விடுகிறதென்றும் தான்.

ராஜாவின் அன்னத்தையும், பெரிய சங்கங்களில் இடும் அன்னத்தையும், காசிற்காக ஓட்டல்களில் இடும் அன்னத்தையும், பசுபந்தம் முதலிய யாகங்களில் இடும் அன்னத்தையும் புசிக்கக்கூடாது என்பதற்கு ப்ரமாணம்:-

"அயுதேவா சகஸ்ரேவா த்விஜோ
பிராம்மணபோஜன ஜிஷ்வாசாபல்யதஃ
க்ஷிப்ரம் புஞ்ஜீதாபஃ பிபேத்துவா பக்ஷம்வா
மாஞ்மதாவா புக்த்துவா விப்ரோ நிரந்தரம்
கிருச்ரம் பராகம் சாந்திரம்ச கிருத்துவா
சுத்திமவாப்னுயாத் தேவாலயேஷு
மார்க்கேஷு கிராமேஷு நகரேஷுசா
விப்ரக் நிரீதான்ன போக்தாசேத்ததா
நரகமாப்னுயாத்|| யஞ்யேஷு பசுபந்தேஷு
அன்னம் வுததியதாத்விஜஃ ஸநரகமாப்னேதி
ஸ பிடாலஸமோ பவேத்"

என்று இப்பிரகாரம் அநேகம் ஸ்மிருதிவாக்கியங்களை ஆதாரமாகக் கொண்டே ஆகாரம் என்ற வியாசத்தை வரைந்துள்ளேன்.

பண்டித K. V. தேவராஜ சாஸ்திரிகள்.



### — வேதாந்த —

# ஐய வினாவும் விடையும்.

(தமிழ்ப் பண்டிதர் பூ. ஸ்ரீனிவாசகன் எழுதியது.)

19-5-1929-ல் எடப்பாடி, மண்டி, கோ. வை. சின்ன ஆறுமுக பக்தர் என்னும் நண்பரொருவர் எனக்கு ஒரு கடிதம் எழுதினார். அவர் அதில் என்னை வேதாந்த சம்பந்தமான சில கேள்விகள் கேட்டு, அவற்றிற்கு விடை யிறுக்குமாறு எழுதி யிருந்தார். தபாற் செலவிற்காக இரண்டணாவும் அனுப்பி யுள்ளார். அதுபோது விடுமுறை யாகலின் ஊரிலில்லாமையால் உடனே அவர் ஆவலைத் திருப்தி செய்ய முடியவில்லை. அன்றியும், என்ன எழுதுவது எனத் தோன்றாம லிருந்ததும் மற்றொரு காரணம். தாமதத்திற்காக நண்பர் மன்னிப்பாராக. அவர்க்குண்டானது போன்ற ஐயம் வேறு சிலர்க்கும் உண்டாயிருக்கலா மாகலின், விடையைப் பத்திரிகையின் வாயிலாக வெளி யிடுவதே நலமாமெனக் கருதுகின்றேன்.

அவர் நிருபச் சுருக்கம்

“தாங்கள் எழுதிவரும் (வேதாந்த சாரசங்கிரக வசனம்) ஆனந்த போதினி வாயிலாகச் சில காலமாகப் பார்த்து வந்ததில் வைகாசி மாதப் பத்திரிகையில் (தத்துவமசி) மகாவாக்கியம், உபதேசம் செய்தது போல் (அது நீ ஆனாய்) என்பதுபோல் (ஸோஹம்) பிரம்மைக்கிய பாவனையைக் காட்டி விட்டீர்கள். இப்பேர்ப்பட்ட உபதேச ரத்தினத்தை அறிந்தவர்கள் தான் அறியக்கூடும். மற்றும் ஏனையோர் இது தெரியவில்லை என்று மயங்குவர். வாசிட்டம் ‘இயற்கைக் குணம் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமம் நீ என்னல் வேண்டும்’ என்றும் ‘பரம முணர்ந்த விவேகியர்க்குப் பரம உபதேசம் பகர்வர்’ என்றும் கூறுகின்றது. நிற்க,

இந்த அடிமை சில ஞான நூல்கள் வாசித்தும் விட்ட லட்சணை விடாத லட்சணை பாகத்தியாக லட்சணை என்பதின் விபரம் என்மனதிற்கு நன்கு கோசரமாகவில்லை. அது விபரம் நன்றாகத் தெரியும்படி எழுதி யனுப்ப வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த மாதப் பத்திரிகையில் தாங்களும் எழுதி யிருக்கின்றீர்கள். அது விவரம் தெரியவில்லை * * *”

வேறு சில கேள்விகளும் நண்பர் கேட்டிருக்கின்றார். எனினும் இவ் விரண்டே முக்கியமானவை. இவற்றுள் முதற் கேள்விக்கு விடை சுலப மானதே. அதாவது,

வேதாந்த நூல்களை எழுதுவோர் மகா வாக்கியார்த்தத்தையும் நேர் முக மாகவோ மறைமுக மாகவோ எழுதியே தீர வேண்டும். சரீரத்திற்குத் தலை எவ்வளவு அவசியமோ, தலையில்லா வுடல் எங்ஙனம் பயனற்ற தாகுமோ அங் ஙனமே வேதாந்தக் கிரந்தத்திற்கும் மகாவாக்கியமும் அவசிய மென்பதையும், அஃதின்றேல் அக்கிரந்தமே பயனற்றதாகு மென்பதையும் நாம் கூறவேண்டு வதில்லை. கைவல்லியம் முதலிய வேதாந்த நூல்களனைத்தும் மகா வாக்கியத் தை நன்கு விளக்கிக் கூறுவதே இதற்குச் சான்றாம். அங்ஙனம் கூறுவதைக் கொண்டே யாவரும் அதன் தத்துவத்தை அனைவரும் அறிந்து கொள்வோ ராகார். வியாதிகளுக்கேற்ற சிகிச்சை முறைகளைக் கூறும் வைத்திய நூல்கள் எண்ணிறந்தனவாக விருப்பினும், தக்க ஆசிரியனிடத்து வைத்தியப் பயிற்சி பெற்றவனுக்கே அவை பயன் படுவதன்றி ஏனையோர்க்குபயோக மாகாமை போல, ஆசிரியன் வாயிலாக முறைப்படி உபதேசிக்கப் பெற் றோர்க்கே மகா வாக்கியார்த்தங்களும் பயன் படுவனவாம். ஆயின் இந்நூல் களாற் பயன் யாதோ வென்னும் வினாத் தோன்றும். அதற்குச் சமாதானம் இதுவாம். அதிகாரிகளின் தாரதம்மியத்திற் கேற்றவாறு சுருக்கமாகவும் பெருக்கமாகவும் பல நூல்கள் தோன்றும். அந்நூல்களை வாசிக்கும் பாக் கியம் பெற்றோரில் சிலருக்கேனும் (எல்லோர்க்கு முண்டாகாது) அதனுண் மையை யுணர வேண்டு மென்னும் ஆவல் தோன்றாதிராது. 'மனம் உண் டானால் வழியுண்டாம்' என்றபடி, அந்த ஆவல் ஆசாரியனிடம் அவர்களை ஈர்த்துச் செல்லும். அதனால் அவர்கள் உய்வு பெறலாம். பஞ்சாட்சரம் இன்னதென்றும் அதன் வகைகள் இன்னின்னவை யென்றும் அந் நூல்கள் கூறுகின்றன. குருவும் அவற்றைத்தான் உபதேசிக்கிறார். எப்படியும், 'தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வரா'தென்பது ஆன் றோர் அனுபவ மொழி யல்லவா ?

வேதாந்தமானது பெரும் சந்தேகத்திற்கிடமான விஷயம். அவ்வளவு எளிதில் யாவரும் அதனை நம்பிவிட முடியாது. பெரும் ஆராய்ச்சிக் குரியது. விஷயங்களை சுருதிகளாலும் யுக்திகளாலும் நன்றாக அலசி அலசி ஆராய்ந்து அனுபவத்திற் பொருத்திப் பார்த்து நிச்சயிக்கப்படவேண்டிய விஷயமாகும். இன்றேல் உண்மை புலனாகாது. அச்சங்கைகளை யகற்றுதற்கே தர்க்கப் பிர மாணங்களோடு பன்னூல்கள் தோன்றுவன வாயின. குரூபதேசமாகிய ஒரு மொழியே நம்பிக்கையுடைய அதிதீவிர பக்குவிக்கும் பயனடையப் போதும். ஆயினும் அவன் பிறர்க்குச் சந்தேகம் தெளிவிக்கும் ஆற்றலற்றவனாவன். அவன் தானும் பிறர் எழுறுத்தலால் மயங்கி நம்பிக்கை யிழக்கக் கூடும். ஆகையால் வேதாந்தப் பயிற்சி செய்வோர் பல பல நூல்களை யாராய்ச்சி செய்தும், அத் தகையாரோடு கலந்து விசாரணை செய்தும் வரவேண்டும். வேதாந்தம் மூட நம்பிக்கையல்ல. ஆகவே கடல்போலகன்றதாயிருத்தலின் "சங்கிரகம் சங்கிரகம்" எனச் சொல்லிக்கொண்டு வெளிப்படும் நூல்களும்

நூற்றுக் கணக்கான இதழ்களை யுடைத்தா யிருக்கின்றன. விஷயங்களை மிகுதியாய்க் கொண்டுள்ளனவாகிய நூல்கள் எத்தனை யிருப்பினும் அவை யனைத்தையும் பார்க்கவேண்டு மென்னும் எண்ணம் வேதாந்தப் பயிற்சி யாளர்க் குண்டாவதில் ஆச்சரியமில்லை. பார்த்தே யாகவேண்டும்.

என்னைப் பொருத்த மட்டில் நான் கூறும் விடை ஒன்றுதான். அதாவது 'ஆனந்தனில்' வெளியிட்டுவரும் 'வேதாந்தசார சங்கிரகம்' ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் செய்தது. அதனை யாவரு முணருமாறு தமிழில் வசனமாக எழுதுவதைத் தவிர நான் செய்வது ஒன்றுமில்லை என்பதே.

இனி, இரண்டாவது வினாவிற்கு விடைகூற முயல்கிறேன். இது சிரமமான காரியமென்று நான் அறிவேன். நண்பர் தாம் விசார சாகரம், பஞ்சதசி முதலிய பிரபல கிரந்தங்களைப் பார்த் திருப்பதாகவும், சில பெரியோர்களையும் கேட்டதாகவும் ஆனால் சந்தேக நீக்கம் உண்டாகவில்லை யென்றும் கூறுகிறார். ஆக, நான் எழுதுவது எங்ஙனம் திருப்தியளிக்க வல்லதாகும் என்று அஞ்சுகிறேன். அவர் சங்கை எது பற்றியதோ? என்னும் ஐயம் எனக்கிருப்பினும் 'லட்சணையின் விபரம் கோசரமாகவில்லை' என்று அவர் எழுதி யிருத்தலால், அதற்கு நான் பொருள் கொள்ளுகிறபடி, 'லட்சணை' யைப்பற்றி கூடியவரையில் எழுத முயல்கிறேன். இது நண்பர்க்கும் பிறர்க்கும் உள்ள ஐயத்தை நீக்கக் கூடுமென்பது எனது முழு நம்பிக்கையாம். (தொடரும்)

### வீட்டுக்குள்ளேயே பெருச்சாளி.

இதற்கென்ன செய்வது? வெளி மனிதன் வந்து திருடினால்தான் கூக்குரலிட்டு, கண்டவர்களிடமெல்லாம் சொல்லி, போலீஸ்காரர்களை யெல்லாம் அழைத்து விசாரித்து, கால்தேய அலைகிறோம். ஆனால் அயர்ந்த சமயம் பார்த்து வீட்டுக்குள்ளேயே இருந்து திருடும் பெருச்சாளிகளை யார் கேட்பது? குதிரை தூக்கிப்போட்டது மல்லாமல் குழியும் பறித்த கதையாய்-மிகவும் வேண்டியவர்களே திருடிக் கொண்டு "என்னைப் பார்த்து திருடினேன் என்று சொல்லவும் படுமா?" என்று சண்டைக்கும் வந்துவிடுகிறார்கள். மௌனமா யிருந்து விடுவதைவிட இதற்கு வேறு நிவர்த்தியில்லை. இந்தப் பெருச்சாளிகளைத் தெய்வந்தான் கேட்க வேண்டும்.

# பாட புஸ்தகங்கள்.

(டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.)

தற்காலத்தில் நடந்து வரும் கல்வியே சரி எனப் பலர் கருதினாலும் அக் கல்வியின் அமைப்பிலும் பல குறைகள் காணப்படுகின்றன. குழந்தைப் பருவமுள்ள மாணவர்களுக்குப் போதிக்கும் கல்வியின் முறையானது ஆடு 4-கால்களை யுடையது, காக்கை கருநிறமுள்ளது என்னும் பாடப் புத்தகங்களில் படம் போட்டுப் பிள்ளைகளின் மனதில் நன்றாய் அழுந்தி யமையும் வகையில் போதிக்கப்படுகின்றது என்றாலும், ஆடு நான்கு கால்களை யுடையது, காக்கை கருநிறமுள்ளது, பசு பால் கறக்கும் என்னும் பாடத்தால் அமையும் சாசுவத ஞானமானது பொருந்திய மாணவன் யுக்த வயதை அடைந்த காலத்தில் அவன் மனதில் பதிந்துள்ள மேல் சொல்லிய ஞானங்களால் என்ன பயனை அடைய முடியும் என்றுதான் கேட்கிறேன்.

மாணவர்களின் மனதில் படியும் போதனை வாக்கியங்களானது கல்வி ஞானத்தையும் அவர்களது யுக்த வயதில் பலனைத் தரக் கூடியதுமான வாக்கியங்களையே பாடசாலைப் புத்தகங்களில் அமைக்கவேண்டும் என்றுதான் நான் கூறுகின்றேன்.

இப்பொழுது நமது மாணவர்களுக்குப் பள்ளிப்பாட புத்தகங்களின் அமைப்பைச் சற்றுக் கவனிப்போமானால் மனம் வருந்தக்கூடிய நிலைமையிலேயே இருக்கின்றோம்.

இரண்டாவது மூன்றாவது நான்காவது ஐந்தாவது ஆறாவது பாரம் முதலான பி. ஏ. வரையில் படிக்கும் மாணவர்களுக்குப் பிரதி வருடமும் பாடப் புத்தகங்களை மாற்றுவது நவீன முறையாகக் கையாளப்படுகின்றது.

அம் முறைகளில் அமைக்கும் பாடப் புத்தகங்கள் சுமார் 200-அல்லது 300-பக்கங்கள் கொண்ட புத்தகங்களை ஏறக்குறைய 15-முதல் 25-புத்தகங்கள் வரையில் ஒவ்வொரு வகுப்பிலும் மாணவர்களுக்குப் பாடப் புத்தகங்களாக அமர்த்துகின்றார்கள். அத்தகைய புத்தகங்களில் மாணவர்கள் வருடம் பூராவும 20-அல்லது 30-பக்கங்களை படிக்க இயலுகின்றது; மற்ற ஏடுகளைத் திருப்பிக்கூட பார்க்க இயலுவதில்லை என்றால் இத்தகைய நிலையில் உள்ள மாணவர்களுக்கு 300-பக்கங்கள் கொண்ட புஸ்தகங்கள் வாங்கும்படிச் செய்வது பொருத்தம் தானா என்று கேட்கின்றேன். அன்றியும் படித்த புஸ்தகங்களை அடுத்தவருஷத்தில் அவர்களது தம்பி முதலானவர்கள் படிக்கஇயலாதபடி மாற்றி விடுகின்றார்கள். இப்படி மாற்றுவது நவீன முறையில் என்ன பல

ளைத் தருகின்றதோ தெரியவில்லை. ஆனால் உபாத்தியாயர்கள் உருப்போட்டு நோட்சு எழுதி வைத்துக்கொண்டு மாணவர்களுக்குப் போதித்து விடாதபடியும் அநேக பிள்ளைகள் சுலபத்தில் பாஸ்பண்ண முடியாத வகையில் திருத்தமடைந்த முறை என்றுதான் சமாதானங்கூற முடியுமே யொழிய வேறில்லை. இம் முறையானது பாமர மாணவர்களாகிய ஏழைகளுக்கு என்ன நன்மை செய்யும் என்றுதான் கேட்கின்றேன். தவிர 30-பக்கம் படிக்கக்கூடிய பிள்ளைகளுக்கு 300-பக்கம் கொண்ட புஸ்தகம் அமைப்பது யாருடைய நன்மைக்காக எனக் கேட்கில் பிரசுரிப்போர்களின் நன்மையையும் அச்சடிப்போர்களின் நன்மையையும் கருதியே அமைக்கவேண்டி யிருக்கின்றதே யொழிய ஏழை மாணவர்களின் நன்மைக்காகவென அறிவுடைய எவரும் ஒப்பக்கூடியதன்று. வேண்டுமானால் இம் முறைகளால் பிரசுரிப்போரும் அச்சடிப்போர்களும் வருஷ வாரியில் லக்ஷம் லக்ஷமாய் பணம் திரட்டலாம்; அத்தகையார்களின் வருவாய்களுக்காகவே மாணவர்கள் இருக்கின்றார்கள் என்று கூறுவது மிகையாகாது. அன்றியும் கல்வி இலாகாவின் ஆதரவைப் பெற்றவர்கள் தாங்கள் பிரசுரிக்கும் புஸ்தகங்களைப் பாட புத்தகமாக அமர்த்தச் செய்து பணம் சம்பாதிக்கவே நம் தேச பாடசாலைகள் அமர்ந்திருக்கின்றனவென்று நினைக்க இடந்தருகின்றது.

இத்தகைய வழியில் பாட புத்தகங்களை அமைப்பது முறையா என்றுதான் நமது கனம் கல்வி மந்திரியைக் கேட்கின்றேன்.

பாட புத்தகங்களை 5-வருஷத்திற்கு ஒரு முறை ஏன் மாற்றக்கூடாது. அன்றியும் குறைந்த பக்கமுள்ள படிக்கக்கூடிய அளவுள்ள வகையில் பாட புத்தகங்களை ஏன் அமர்த்தக்கூடாது என்றுதான் கேட்கின்றேன்.

கடைசியாய் கல்வி இலாகாதாரர்கள் ஏழைகளின் வறுமையைக் கவனிக்கும் பட்சத்தில் பாட புத்தகங்களை பக்கம் குறைத்தும் 5-வருஷத்திற்கொரு முறை மாற்றவும் செய்யவேண்டும். அல்லது பிரசுரிப்பவர்களின் லாபத்தைக் கருதுவார்களானால் தற்கால முறைப்படி நடத்தலாம்.

இந்த நிலையில் கனம் மந்திரி அவர்கள் கல்வியின் முறையை எவ்வகையில் திருத்த முன் வருவார் என்று யோசிக்கவேண்டிய திருக்கின்றது. இது வரையில் கூறிவந்த முறைகளில் நீங்கள் தெரிந்துகொண்ட முக்கிய விஷயங்களானது யாதெனில் நமது கல்வி கல்வியாகாதென்பதும் உள்ள கல்வியும் மாறுதலடையவேண்டும் என்பதும் அதற்கு அரசாங்கம் முயற்சிக்குமாறு நாம் கேட்டுக்கொள்ள வேண்டுமென்பதும் தான். இத்துடன் இச்சிறிய கட்டுரையை முடித்து விடுகின்றேன்.

---




## கிருஷ்ணாலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(62-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

**முனியன்:**—நான் கிட்டுவைச் சற்று முன்புதான் கண்டேன். அவன் மனோன்மணி யிருக்குமிடத்தைத் தெரிந்து கொண்டான். இராஜ வேலைச் சந்திக்க வேண்டுமென்றுகூறி எப்படியேனும் அவளை யழைத்து வந்து விடுவான். நான் இராஜவேல் வேடத்தோடு வண்டியிலிருப்பேன். கிட்டு துரிதமாய் அவளை யழைத்து வந்து வண்டியில் ஏறி விடுவான்; நான் உடனே மயக்க மருந்தால் அவளை ஸ்மரணை நீங்கச்செய்து விடுவேன். நீ வண்டியைத் துரிதமாய் ஓட்டிக்கொண்டு 42—வது வீதியிலுள்ள வீட்டிற்குச் செல்லவேண்டும்.

**ஆனந்:**—கடைசியில் அவளை யென்ன செய்வது?

**முனியன்:**—என்ன செய்வதா? ஏன்? அச்சங்கதி யெனக்குத் தெரிவது போல் உனக்கும் தெரியுமே!

**ஆனந்:**—அட தெரியாதென்று யார் கூறியது? இப்போது அந்த 42—வது வீதியிலுள்ள வீட்டுக்குக் கொண்டுபோனதே யென்ன செய்வது?

**முனியன்:**—மறு உத்திரவு வரையில் அங்கு வைத்துக்கொண்டிருப்பது.

**ஆனந்:**—கிட்டு எப்போது வருவான்?

**முனியன்:**—எப்படியும் பனிரெண்டேகாலுக்குள் வந்து விடுவான்.

**ஆனந்:**—அப்படியாயின் அது வரையில் நாம் இங்கேயே காத்திருப்பதில் பயனென்ன? யாரேனும் கண்டால் சந்தேகப்படுவார்கள்.

**முனியன்:**—அது உண்மையே. ஏது பிச்சா மிக்க எச்சரிக்கையாய் விட்டிருக்கிறாய்?

**ஆனந்:**—"வண்டியில் ஏறிக்கொள்; மெதுவாய் உலவிக்கொண்டு வருவோம்" என்றான்.

அவ்வாறே முனியன் ஏறிக்கொள்ள ஆனந்தலிங் வண்டியை மெதுவாய் ஓட்டிக்கொண்டே சென்றான்.

வழியில் தன் ஜேபியில் இருந்து எதையோ வெடுத்துக் கொண்டும், யாராவது வருகிறார்களா வென்று சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டும் ஜன சஞ்சாரமில்லாத ஒரு வீதிக்கு வண்டியைக் கொண்டுபோய் தட்டென்று நிறுத்தித் துரிதமாயக் கீழே குதித்து வண்டியின் சாளரத்தருகிற் சென்று அவசரத்தோடு முனியா! முனியா! வென்றான். முன்னமே பிச்சன் ஏன் வண்டியை நிறுத்திக் கீழே குதித்தான் என்பதை யறிய மிக்க ஆவலோடிருந்த முனியன் சட்டென்று தலையைச் சாளரத்திற்கு வெளியில் நீட்டி

னான். ஆனந்தஸிங் ஒரு கரத்தால் சட்டென்று அவன் கொண்டையைப் பிடித்துக்கொண்டான். அது இரும்புப்பிடிபோல் இருக்கவே முனியனால் விடுவித்துக்கொள்ள முடியவில்லை. ஆனந்தஸிங் ஒரு விநாடிக்குள் தன் மறுகையிலிருந்த சிறு புட்டியை யவன் மூக்கில் வைத்து முகரும்படி செய்தான். முனியன் மறுநிமிடம் ஸ்மரணை யற்றுச் சவம்போல் வண்டியில் சாய்ந்து விட்டான்.

ஆனந்தஸிங் உடனே வண்டியை யதிவேகமாய் விட்டுக்கொண்டு இராஜவேலை வந்திருக்கச் சொன்ன விடத்திற்குச் சென்றான். இராஜவேல் அங்கு ஆயத்தமாய்க் காத்திருந்தான். ஆனந்தஸிங், "இராஜவேல்! சீக்கிரம்; ஒன்றும் பேசாதே. வண்டிக்குள் உன்போல் வேடமணிந்த ஒருவன் என் மருந்தால் ஸ்மரணை யற்றிருக்கிறான். சீக்கிரம் நீயும் உள்ளே யேறிக்கொள். ஒரு விநாடிகூட ஆலசியம் உதவாது" என்றான்.

இராஜவேல் அவ்வாறே ஏறிக்கொண்டு ஆனந்தஸிங் யாவருடைய இரகசியங்களையும் அறிந்து கொள்ளும் சாமார்த்தியத்தை நினைந்து மிக்க வியப்படைந்து நமக்கு இதன் ஒரு விவரமும் தெரியாவிடினும் இப் புண்ணிய புருஷன் நமது நண்பனாயிருக்கிற வரையில் யாவும் அனுகூலமாகவே முடியும் என்று தனக்குள் தைரியங்கொண்டான்.

ஆனந்தஸிங் வண்டியை யதிவேகமாய் விட்டுக்கொண்டு வந்து இராஜவேல் வசிக்கும் வீட்டெதிரில் நிறுத்தித் துரிதமாய்க் கீழே குதித்து "இராஜவேல்! உன் அறைகளின் சாவிகளைக் கொடுத்துவிட்டுக் குதிரைகளைப் பிடித்துக்கொண்டு சற்று நில்" என்றான்.

இராஜவேல் அவ்வாறே சாவிகளைக் கொடுத்ததே ஆனந்தஸிங் முனியனை யொருகுழந்தையைத் தூக்கிச் செல்வதைப்போல் தூக்கிக்கொண்டு போய் அவனை இராஜவேல் அறையில் ஒரு மஞ்சத்தில் போட்டுவிட்டுத் தன்னிடமிருந்த ஒரு உறுதியான கயிற்றால் அவனுடைய கால் கைகளைக் கட்டியதோடு கைகளுக்கு விலங்கும் பூட்டி அவன் வாயில் ஒரு துணியை யடைத்துவிட்டு கொடிக்குள் அறையைப் பூட்டிக்கொண்டு வீதிக்குவந்து, இராஜவேலை நோக்கி "உனக்குக் கிட்டு என்பவன் தெரியுமா?" வென்றான்.

இராஜவேல் ஆகா நன்று யறிவேன் என்றான். ஆனந்தஸிங் "சரி நீ யென்ன செய்யவேண்டும் தெரியுமா? நீ வண்டியில் உட்கார்ந்து கொண்டிரு. யாராவது உன்னை நோக்கி வந்தால் அச்சமயம் நீ யவர்களுக்குப் புலப்படும்படியாய் உட்கார்ந்திருக்க வேண்டும். ஆனால் முகத்தை மட்டும் நன்றாயக் காட்டிவிடாதே. நீ மாறுவேட இராஜவேலை யன்றி மெய் இராஜவேலல்ல வென்பதை மறவாதே சுமார் பனிரெண்டேகால் மணிக்குக் கிட்டு மனோன்மணியை யழைத்துவந்து வண்டியில் ஏற்றுவான். கிட்டுவும் மனோன்மணியும் உன்னை நோக்கி வரும்போது நீ வண்டியின் கதவைத் திறந்துகொண்டு ஆயத்தமாயிரு. அவன் சட்டென்று மனோன்மணியை வண்டியில் ஏற்றிவிட்டு கதவை மூடிக்கொண்டு போய் விடுவான். நான் வண்டியைத் துரிதமாய் ஓட்டிக்கொண்டு செல்வேன். நீ மனோன்மணியைக் கண்டதே ஆத்திரத்தால் பேசி விடாதே. பத்திரம் பத்திரம். உன் சாமார்த்தியத்தால் சற்றுதூரம் வண்டிபோகு மட்டும் பேசாமலிருக்கச் செய். ஆனால் கிட்டு பரம சண்டாளனாகிய விரோதியென்றும் நீ யவளைக் காப்பாற்றுவதாகவும் கூறிவிடு. அப்படி யவசியம் கூறவேண்டும். இது முக்கியம் மறவாதே" என்றான். (தொடரும்)



# வர்த்தமானப்பகுதி

## பேரன் பாட்டி கல்யாணம்:—

சாலமன் தீவில் உள்ள காட்டு மிராண்டிகளில் ஐந்துவித ஜாதியார்கள் உண்டு. ஒவ்வொரு பிரிவினருக்கும் பட்சிகள், மிருகங்களின் பெயர்கள் தொன்று தொட்டு வழங்கி வருகின்றனவாம். இறந்துபோனவர்களின் உடலை அவர்கள் தகனம்செய்து விடுகின்றனர். ஒரு உயர்ந்த காஷ்டத்தை அடுக்கிச் சுக்கிரன் உதயமாகும் போது பிரேதத்தை வைத்து அதற்குத் தீ வைத்துவிட்டுப் பகல் 15 நாழிகை வரைக்கும் சடங்குகளைச் செய்துகொண்டிருப்பார்கள். குற்றவாளிகள், தற்கொலைசெய்துகொண்டோர், மரத்தினின்றும் விழுந்து இறந்துபோனவர்கள் முதலானவர்களுடைய தேகங்கள் பகற்காலத்தில் அடக்கம் செய்யப்படும். காஷ்டத்தில் அவர்களுடைய பிரேதங்களை வைத்துத் தீ மூட்டிய பின்னர் இறந்துபோனவர்களின் உறவினர்கள் வீட்டுக்குள் சென்று கதவை அடைத்துக்கொண்டு பெரிய பேரிகை, தப்பட்டை முதலானவைகளை அடித்துப் பெரிய சப்தமுண்டாக்குவார்களாம். இதனால் இறந்து போனவர்களுடைய பேய் பிசாசுகள் தங்கள் வீடுகளில் அண்டாமல் இருக்கும்படியாகச் செய்யப்படுமாம். அவர்களின் விவாக விவரங்கள் மிகவும் வேடிக்கையானவை. ஒவ்வொரு யௌவன புருஷனும் இரண்டு மனைவிகளுக்குக் குறையாமற் பெற்றிருப்பான். இரண்டாவது மனைவி எப்பொழுதும் கணவனைக் காட்டிலும் அநேக வயது முதிர்ந்தவளாகவே யிருப்பாள். வம்சாவழிகள் புருஷர்கள் மூலமாகவே தொடருவதால் ஒருவன் தன்னுடைய பாட்டியையும் விவாகம் செய்து கொள்ளக் கூடுமாம். அவ்விதமே அநேகர் செய்துகொண்டிருக்கின்றனராம்.

***

## சந்திரனுக்குப் பறத்தல்:—

ஆகாயவிமானத்தில் பிரயாணம் செய்து சந்திர மண்டலத்தை அடைவதற்குச் சாத்தியப்படுமா வென்பதைப்பற்றி ஒரு மேனாட்டு ஆராய்ச்சியாளர் சில காலமாக ஆராய்ச்சி செய்து வருகிறார். பூமிக்கு மேல் சில மைல்கள் உயரமே பிராணவாயு பரவியிருப்பதாகவும் அதைத் தாண்டியதுடன் பிராணவாயு இல்லாமல் இறந்து போக வேண்டுமென்றும் இதுகாறும் கூறப்பட்டு வந்ததற்கு அவர் பிராணவாயு உற்பத்தி செய்யக்கூடிய ஒரு இயந்திரத்தை ஆகாய விமானத்தில் அமைத்து அதன் மூலம் மனிதன் ஜீவித்திருக்க முடியுமென்று கூறுகிறார்.

***

## காகிதப் பால் புட்டிகள்:—

லண்டனின் வட பாகத்திலுள்ள ஓர் கால் நடைத்தொழுவத்தார் காகிதத்தினால் பால் புட்டிகள் செய்யும் ஓர் யந்திரத்தை நிர்மாணித்துள்ளனராம். காகிதத்தில் பாட்டில்கள் செய்யப்பட்டவுடன், அவை கொதிக்கும் அரக்கில் சுத்தி செய்யப்படுகின்றனவாம். பிறகு யந்திரமே அதில் பாலை நிரப்பி மூடிச் சீல்வைத்து விற்பனைக்குத் தயாராகச் செய்துவிடுகிறதாம். இதற்கு இரண்டே வினாடிகள் தாம் செலவாகின்றதாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**சுக்கில௵ புரட்டாசிமீ—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,**
**பசலி 1339—கொல்லமாண்டு 1105—ஹிஜரி 1348,**
**இங்கிலீஷ் 1929௵—செப்டம்பர்மீ—அக்டோபர்மீ**

| புரட்டாசி | செப்டம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | திங் | திர54-8 | அவி53-35 | சித்60 | கன்னிரவி நா-5 வி-5 |
| 2 | 17 | செவ் | சது56-0 | சத57-5 | மர60 | அனந்த விரதம் |
| 3 | 18 | புத | ○56-53 | பூர59-20 | அ59-30சி | பௌர்ணமி [குள்மழை |
| 4 | 19 | வியா | பிர56-15 | உத்60 | சித60 | மாளயபட்சாரம்பம் 9-க் |
| 5 | 20 | வெ | துதி54-50 | உத்0-28 | சித்0-28அ | அசூன்யசயன விரதம் |
| 6 | 21 | சனி | திரி52-33 | ரேவ0-38 அஸ்59-58 | மர0-38சி | அவமாகம், பிருஹத்யுமா விரதம் |
| 7 | 22 | ஞா | சது49-25 | பர58-35 | சி60 | சங்கஷ்ட சதுர்த்தி |
| 8 | 23 | திங் | பஞ்45-40 | கி✕56-38 | ம56-38அ | கிருத்திகை |
| 9 | 24 | செவ் | சஷ்41-23 | ரோ53-58 | அ53-58சி | சந்திரசஷ்டி விரதம் |
| 10 | 25 | புத | சப்36-33 | மிரு50-48 | சித்60 | மஹாலக்ஷ்மி விரதம் |
| 11 | 26 | வியா | அஷ்31-15 | திரு47-18 | ம47-18அ | கௌஜௌரி விரதம் |
| 12 | 27 | வெ | நவ25-33 | புன43-13 | சி43-13மர | |
| 13 | 28 | சனி | தச18-58 | பூச39-13 | சி39-13மர | |
| 14 | 29 | ஞா | ஏகா13-43 | ஆயி35-15 | சி35-15மர | |
| 15 | 30 | திங் | துவா8-0 | மக31-30 | மர31-30சி | |
| 16 | 1 | செவ் | திர2-43 சது58-13 | பூர28-20 | சி28-20அ | |
| 17 | 2 | புத | அ● 54-28 | உத்26-3 | அமி26-3ம | |
| 18 | 3 | வியா | பிர52-28 | அஸ்24-53 | சித்60 | |
| 19 | 4 | வெ | துதி51-43 | சித்25-5 | சித்60 | |
| 20 | 5 | சனி | திரி52-40 | சுவா26-58 | அ26-58சி | |
| 21 | 6 | ஞா | சது55-18 | விசா30-28 | மர60 | மாசசதுர்த்தி விரதம் |
| 22 | 7 | திங் | பஞ்59-25 | அனு35-25 | சித்60 | லலிதா பஞ்சமி |
| 23 | அக்டோபர் 8 | செவ் | சஷ்60 | கே41-43 | ம41-43அ | சஷ்டி, திருதினஸ்பிருக் |
| 24 | 9 | புத | சஷ்4-50 | மூல48-53 | ம48-53அ | சரஸ்வதி ஆவாஹனம் |
| 25 | 10 | வியா | சப்10-45 | பூரா56-10 | சித்60 | கணிதாரம்பம் [களில் |
| 26 | 11 | வெ | அஷ்16-55 | உத்60 | சித்60 | சரஸ்வதிபூஜை சில விடங் |
| 27 | 12 | சனி | நவ22-38 | உத்3-25 | சித்60 | ஆயுதபூஜை, சரஸ்வதி |
| 28 | 13 | ஞாய | தச27-22 | திரு9-43 | அமி9-43ம | விஜய தசமி [பூஜை |
| 29 | 14 | திங் | ஏகா30-42 | அவி14-50 | சித்60 | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 30 | 15 | செவ் | து32-35 | சத18-35 | மர60 | பத்மநாப துவாதசி |
| 31 | 16 | புதன் | திர32-48 | பூர20-38 | அ20-38சி | துலாரவி நா-34-46 |

| | ராகு | குரு | |
|---|---|---|---|
| | 4-சிம்ம-சுக் 7-துலா-புத 10-துலா-செ 29-கன்-சுக் | | சுக் |
| சனி | | கே | சூ-பு செ |

**Printed & Published by N. Munisawmi Mudaliar,**
**at the "Ananda Bodhini" Power Press,**
**Lawyer Chinnathambi Mudali St., Madras.**